ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான்பிள்ளை குமாரர் ஆச்சான் பிள்ளை திருவடி
ஸ்ரீவாதிகேஸரி அழகிய மணவாள ஜீயர் திருவடிகளாகிய

**யாமுநாசார்யர்**

அருளிச் செய்த

# ப்ரமேயரத்நம்

பரிஶோதகர்கள்:
ஸ்ரீமான் உ.வே. திருநீர்மலை கோமடம் ஸ்ரீநிவாஸாசார்யர்
ஸ்ரீமான் உ.வே. கோயில் ஆத்தான் விஜயராகவாசார்யர்

பதிப்பாளர்:
அழகர் திருமலை மாடபூசி ஸ்ரீதர: ஸ்ரீநிவாஸன்

*"பொன்னி சூழ் திருவரங்கம்",*
*37, மணவாள மாமுனிகள் ஸந்நிதி வீதி,*
*ஸ்ரீபெரும்பூதூர் - 602 105. தொலைபேசி : 2716 3340*

**விலைக்கு அல்ல – வெறிதே கிடைக்கும் – நேரில் பெறுக**

வெளியீடு : முதற்பதிப்பு
மணவாள மாமுனிகள் திருவத்யயந வெளியீடு
- ஸர்வதாரி மாக க்ருஷ்ண த்வாதசி (2009)

## பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| 1. | முதல் ப்ரகரணம் - வைஷ்ணவத்வம் | 11 |
| 2. | இரண்டாம் ப்ரகரணம் - ஆசார்ய வைபவம் | 29 |
| 3. | மூன்றாம் ப்ரகரணம் - உபாய வைப₄வம் | 38 |
| 4 | நான்காம் ப்ரகரணம் - உபேயயாத₂த்ம்யம் | 45 |

அச்சிட்டோர் :
ஆர்என்ஆர் பிரிண்டர்ஸ்
நெ.19, தாண்டவராயன் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
☎ 2844 7071 / 2844 1856

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

ஸ்ரீமத் விஶிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃தா₄ந்தத்தை நிலைநிறுத்திய பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் பலவுள்ளன. அவற்றில் இப்ரமேயரத்நம் அருளிச்செய்த யாமுநாசார்யர், பன்னீராயிரப்படி அருளிச்செய்த வாதிகேஶரி அழகிய மணவாளச் சீயரின் சிஷ்யராவார். இவர் தத்வபூஷணம், ப்ரமேய ரத்நம் ரஹஸ்யத்ரய ஸாரம் என்னும் மூன்று நூல்களை அருளிச் செய்ததாகத் தெரிய வருகிறது. பற்பல ஆண்டுகளுக்கு முன் தெலுங்கு லிபியில் பதிப்பிக்கப்பட்ட இந்நூல் இப்பொழுது தமிழ் லிபியில் வெளியிடப்படுகிறது.

சிறந்த மணிப்ரவாள நடையில் அமைந்த இக்ரந்த₂ம் காலக்ஷேப முறையில் அப்யஸிக்கப்பட வேண்டிய ஒன்றாம். இதில் ஸாத்விகனான ஸ்ரீவைஷ்ணவன் அறிந்துகொள்ள வேண்டிய வைஷ்ணவத்வம், ஆசார்ய வைப₄வம், உபாய விஶேஷம், உபேயயாதா₂த்ம்யம் என்னும் நான்கு விஷயங்கள் அநேக ப்ரமாணங்களையும், ஐதிஹ்யங்களையும் கொண்டு எளிய நடையில் அத்யத்பு₄தமாக நிரூபிக்கப்பட்டுள்ளன.

இதில் முதல் ப்ரகரணத்தில், வைஷ்ணவத்வமாவது குறிக்கோளும், சீர்மையுமாம். அதாவது நாம் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்கள் என்று அறிவது ஸ்வஸ்வரூப ஜ்ஞாநம், பாகவத ஶேஷத்வ பர்யந்தமாக அறிதல் அந்த ஜ்ஞாநத்தின் தெளிந்த நிலை. இந்த விஷயத்தை மேற்கோள்களுடன் தெளிவடையச் செய்திருப்பது பரம பே₄ாக்₃யமாகும்.

இரண்டாவதான ஆசார்ய வைப₄வ ப்ரகரணத்தில் த்₃வயத்தை உபதே₃ஶிப்பவரே ஆசார்யராகக் கடவர், பரமாசார்யபூ₄தரான ஈஶ்வரனிற் காட்டிலும் ஆசார்யன் அதி₄கன் என்னும் விஷயங்கள் ப்ரமாண பூர்வமாக ப்ரதிபாதிக்கப்பட்டுள்ளன.

மூன்றாவதான உபாய வைப$_4$வ ப்ரகரணத்தில் மற்ற உபாயங்களைக் காட்டிலும் ப்ரபத்தியின் விஶேஷம் பலபடியாக நிரூபிக்கப்பட்டுள்ளது. எம்பெருமானுடைய திருவடிகளையே உபாயமாகப் பற்றுகை உபாய ஸ்வரூப ஜ்ஞானம். அவனை நாமாகப் பற்றுகிற பற்றும் அஹங்கார கர்ப்ப$_4$மாயிருக்கும். ஆகையாலே அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகமென்றிருக்கை அந்த ஜ்ஞானத்தின் தெளிந்த நிலை.

நான்காவது உபேயயாதாத்ம்ய ப்ரகரணம். ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்கை புருஷார்த்த ஸ்வரூப ஜ்ஞானம். கைங்கர்யம் செய்வதனால் உண்டாகும் ஆநந்தம் எம்பெருமானுடையதேயாம். அவ்வாநந்தத்தைக் கண்டு சைதந்ய கார்யமாக ஆநந்திப்பதே நமக்கு உற்ற ஆநந்தம் என்றிருக்கை அந்த ஜ்ஞானத்தின் தெளிந்த நிலை.

ஆக ஸாத்விகனான ஸ்ரீவைஷ்ணவன் அறிந்துகொள்ள வேண்டிய அர்த்தப்ரமேயம் வைஷ்ணவத்வமும், ஆசார்ய வைபவமும், உபாய விஶேஷமும், உபேய யாதாத்ம்யமுமாகும். இந்நான்கு விஷயங்களும் இந்த க்$_3$ரந்த$_2$த்தில் சுருக்கமாகவும், தெளிவாகவும் விளக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீபெரும்பூதூர், உப$_4$யவேத$_3$ாந்த வர்த்$_3$தி$_4$நீ பாடஶாலையில், ந்யாய வேத$_3$ாந்த உபாத்$_4$யாயராகவும், அடியேனுக்கு உபாத்$_4$யாயராகவும், அக்காலத்தில் ஶ்ரேஷ்டராகவும், ஶிஷ்டராகவும், ஸதாசாரஶீலராகவும் விளங்கி வந்த ஸ்ரீமான் உ.வே. அழகர் திருமலை மாடபூசி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் பௌத்ரரும், அடியேனுக்கு புத்ரதுல்யரும், இந்நூலின் பதிப்பாளருமான ஸ்ரீமான் உ.வே. அழகர் திருமலை மாடபூசி ஸ்ரீதர: ஸ்ரீநிவாஸன், மேன்மேலும் பற்பல ஸத்ஸம்ப்ரதாய நூல்களை வெளியிடக்கூடிய ஸக்ஷம ஸம்ப்ரதாய ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நராய், திருமாலடியார்களைப் பூசிப்பவராய், வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே என்று விளங்க வேணுமாய் எம்பெருமானார் திருவடிகளில் விண்ணப்பிக்கிறேன்.

ஸ்ரீ வைஷ்ணவ தா$_3$ஸன்,
திருநீர்மலை கோமடம் ஸ்ரீநிவாஸாசார்யர்
ஜெய்நகர், பெங்களூர். தொலைபேசி: 080 - 2244 7172

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பதிப்பாளரின் முன்னுரையாமிது

ப்ரமேயரத்நமென்னும் இந்நூலினை இயற்றியவர், யாமுநாசார்யரென்னும் மஹாசார்யராவார். இவர், ஸ்ரீப₄ாஷ்யகாரரது பஞ்சாசார்யர்களில் ஒருவரான திருமாலையாண்டானது பௌத்ர பௌத்ரராம். அதாவது திருமாலையாண்டானது பௌத்ரர் இளையாழ்வாரது, பௌத்ரரே இவர். இவர் நம்பிள்ளை திருவடிகளாம், பெரியவாச்சான் பிள்ளை குமாரர் ஆச்சான்பிள்ளை திருவடிகளாம், வாதிகேஸரி அழகியமணவாளச் சீயரது சீடராம். இவர் தமது நூலில் தத்வார்த்தங்களை விளக்கும்போது, பூர்வாசார்யர்களது வாக்யங்களையே மேற்கோள்களாகக் காட்டுவது ஒருசிறப்பு. இவரது மற்றொரு நூலாம் தத்வபூ₄ஷணத்திலும் கூட இந்நிலையே. பூர்வாசார்யர்களது வாக்யங்களையே ப்ரமாணமாகச் காட்டுவது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கேயுள்ள தனிச்சிறப்பாம்.

ரஹஸ்யத்ரய வ்யாக்யாநம் போலமைந்துள்ள இந்நூலில், ப்ரபந்நனும் ஸாத்விகனுமாகிய வைஷ்ணவன் அறிந்துகொண்டு அநுஷ்டிக்க வேண்டிய வைஷ்ணவத்வம்; ஆசார்ய வைப₄வம்; உபாய விஶேஷம் மற்றும் உபேய யாத₂ாத்ம்யம் ஆகிய நான்கு விஷயங்களையும் நான்கு ப்ரகரணங்களில் விவரிக்கிறார் யாமுநாசார்யர். அதிலும் பூர்வாசார்ய வாக்யங்களைக் கொண்டே நிரூபணம் செய்துள்ளமை மிக்க இனிதாம்.

இந்நூலில் பற்பல ஆசார்யகளைப் பற்றிய ஐதிஹ்யங்கள் இருக்க, பெரியாண்டானைப் பற்றி சிற்சில விண்ணப்பிக்கிறோம் அஸ்மத்குலகூடஸ்தரென்னும் ஆசார்ய ஸம்ப₃ந்த₄ விஶேஷத்தினால்.

ஸ்ரீபாஷ்யகாரர் நியமித்தருளிய எழுபத்து நான்காசார்யர்களில் இருவர் பெரியாண்டானும் சிறியாண்டானும். இவ்விருவரும் ஸஹோதரர்கள். இவ்விருவரில் பெரியாண்டானது குமாரரே மாடபூசியாழ்வான் என்பவர். இம்மூவரும், இவர்தம் வம்ஶத்தவரும் அழகரெம்பெருமானையே தமக்கு எல்லாமென்றுணர்ந்து, அவ்வழகர்

திருமலையையே நித்ய வாஸஸ்த$_2$ானமாகக் கொண்டு, அவ்வழகரது அடியார்களையும் பூசித்துக்கொண்டு நற்போது போக்கிவந்தார்கள். இவர்கள் பூர்வஶிகையணிந்தவர்களோ, திருமாலையாண்டானது வம்ஶத்தவர்களோ அல்லர். இவர்களனைவரும் நைத்$_4$ருவ காஶ்யப கே$_3$ாத்ரத்தினராம்.

பெரியாண்டான், அழகர் திறத்தில் தமது சைதந்யம் குலையும்படியான பேரன்பு பூண்டவரென்பது இப்ரமேய ரத்நமென்னும் நூலில் காணும், "பெரியாண்டான் திருத்தோரணம் துடங்கி அழகர் திருவடிகளறுதியாகப் பத்தெட்டு திவஸம் தெண்டனிட்டுக் கிடப்பர். ராத்ரி மநுஷ்யர் போகும்போது ஆண்டான் கிடக்கிறாரோ, பஶு கிடக்கிறதோ, வழி பார்த்துப் போங்கோளென்னும் படியிறே சலியாமல் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வம் பண்ணும்படி" என்னும் ஐதிஹ்யத்தாலும், "ப$_4$க$_3$வத்கு$_3$ணாநுப$_4$வத்திற்குப் படிமா பெரியாண்டானும், எம்பாரும்" என்னும் ஐதிஹ்யத்தாலும் தெரியவருகிறது.

பெரியாண்டானது குமாரராம் மாடபூசியாழ்வானும் தமது தந்தையாரைப் போலவே, அழகர்திறத்தும், அழகர்தம் அடியார்திறத்தும் பேரன்புபூண்டு விளங்கியவராதலால், "உலகுக்கு அணியன்னர் அன்புடை மாக்கள்" என்னும் தமிழ் மரபுக்கிணங்க (நான்மணிக்கடிகை) அழகர்தம் மாடங்களுக்கே பூ$_4$ஷணமாய்க் கொண்டாடப்பட்டு, அதுவே காரணப்பெயராய், வடமொழியில் மாட$_3$பூ$_4$ஷணரென்றும், செந்தமிழில் மாடபூசியாழ்வான் என்றும் வழங்கப்பட்டார்.

மாலாத$_4$ர வம்ஶத்தவரான திருமாலையாண்டான், அவர்தம் குமாரர் ஸுந்தரத் தோளுடையார், அவர்தம் குமாரர் இளையாழ்வார், அவர்தம் பௌத்ரரான இந்நூலாசிரியர் யாமுநாசார்யர் போன்ற மஹாசார்யர்களும், அவ்வழகரெம்பெருமானையே தமக்கு எல்லாமுமாகக் கொண்டு, அவ்வழகர் திருமலையையே தமக்கு மேலான கதியாகவும் கொண்டு, அடியார்களையும் பேணிக்கொண்டு நற்போது போக்கிவந்தார்கள். இவர்களனைவரும் பூர்வஶிகையணிந்த காஶ்யப கே$_3$ாத்ரத்தினராம்.

ப்ரமேயரத்நமென்னும் இந்நூலில் பெரியாண்டானைப் பற்றிய ஐதிஹ்யங்கள் சிற்சில வருவதனாலும்; இந்நூலினை இயற்றிய யாமுநாசார்யர் திருமாலையாண்டானது வம்ஶத்தவரென்பதனாலும்; சிற்சிலர், பெரியாண்டானும், திருமலையாண்டானது குமாரர் சுந்தரத் தோளுடையாரும் ஒரே வ்யக்திதான் என்று அநுமானிக்கிறார்கள். இவ்வநுமானம் சரித்திரத்திற்கு முரண் என்பதை, விரிவுக்கஞ்சாமல் விளக்குவது நமது கடமையென்பதால் அப்படியே செய்கிறோம்.

1. கு$_3$ரு பரம்பராப்ரப$_4$ாவம் போன்ற ஆசார்ய வைப$_4$வ நூல்கள் அனைத்திலும், பெரியாண்டானையும், ஸுந்தரத் தோளுடையாரையும், தனித்தனி வ்யக்திகளாகவே காட்டியிருக்கிறார்கள் நம் முன்னோர்கள். ஓரிடத்திலும்கூட பெரியாண்டான்தான் ஸுந்தரத்தோளுடையாரென்று நேரிடையாகவோ, மறைமுகமாகவோ காட்டவில்லை.

2. நமது பூர்வாசார்ய வைப$_4$வ நூல்களில் பெரியாண்டானுக்குச் சிறியாண்டானென்னுமொரு இளைய ஸஹோதரர் இருந்ததாகக் காண்கிறது. ஆனால் ஸுந்தரத்தோளுடையாருக்கு ஒரு இளைய ஸஹோதரர் இருந்ததாக எந்த நூலிலும் இல்லை, ப்ராந்திய வழக்கிலுமில்லை. உதாஹரணம் காட்டவேண்டுமென்றால் கோவிந்தப் பெருமாளையும் சிறியகோவிந்தப் பெருமாளையும் போல்; கிடாம்பியாச்சானையும் கிடாம்பிப் பெருமாளையும் போல்; அருளாளப்பெருமாளெம்பெருமானாரையும் அலங்கார வேங்கடவரையும் போல்; மாருதிப் பெரியாண்டானையும் மாருதிச் சிறியாண்டானையும் போல்; கோமடத்தாழ்வானையும் கோமடத்துச் சிறியாழ்வானையும் போல்; பெரியாண்டானும் சிறியாண்டானும் ஸஹோதரர்கள்.

3. பெரியாண்டான்தான் ஸுந்தரத்தோளுடையார் என்பது சரித்திரமானால், ப்ரமேயரத்நமென்னும் இந்நூலிலேயே இதன் ஆசிரியராம் யாமுநாசார்யர் இதை வெளியிடத் தடையில்லையே? ஏனென்னில், திருமலையாண்டானது பௌத்ரராம் இளையாழ்வாரைக் குறிப்பிடுகையில், "இளையாழ்வாரான திருமாலையாண்டான்" என்றே குறிப்பிடுகிறார் தவறாமல். ஆனால் பெரியாண்டானைப் பற்றிக் குறிப்பிடுகையில், திருமாலை யாண்டானையோ, ஸுந்தரத் தோளுடையாரையோ, தொடர்புபடுத்தி எங்கும் குறிப்பிடவில்லை.

4. முக்கியமான மற்றுமொரு இதிஹாஸத்தைக் கொண்டும், பெரியாண்டானும் ஸுந்தரத்தோளுடையாரும் வெவ்வேறானவர்கள் என்று நிரூபிக்கலாம். அது யாதென்னில், ஸ்ரீபாஷ்யகாரர் தமது அந்திம தஶையில், தமது மடத்தில் எழுந்தருளியிருந்த முதலிகள் பலரையும் குளிரக்கடாக்ஷித்து அருளினாற்போல், பெரியாண்டானையும், சிறியாண்டானையும் குளிரநோக்கி, தமது விஶ்லேஷத்தில், அவிவேகம் (ப்ராணத்யாகம்) பண்ணக்கூடாது, என்று அன்புக் கட்டளையிட்டு, அவ்விருவரையும் எம்பார் திருக்கைகளிலே காட்டிக் கொடுத்தாக ஆறாயிரப்படி குருபரம்பரையில் காண்கிறது. அதே நூலில்

ஸ்ரீபாஷ்யகாரரது அவதார ஸமாப்தியை செவியுற்ற திருமாலையாண்டான் குமாரர் ஸுந்தரத்தோளுடையார், ஶோகாவிஷ்டராய், அழகர் ஸந்நிதியிலிருந்து கோயிலுக்கு எழுந்தருளி மிகவும் க்லேஶித்து, பின்பு பட்டரை ஸேவித்துத் தமது வ்யஸநமெல்லாம் தீரப்பெற்று, அழகர் திருமலைக்கு மீண்டாரென்றுள்ளது. பெரியாண்டானும், ஸுந்தரத் தோளுடையாரும் இருவேறு வ்யக்திகளென்பதற்கு இனியும் ஆதாரங்கள் வேண்டுமோ? மேலே எடுக்கப்பட்ட இரு இதிஹாஸங்களும், நம் புத்தூர் ஸ்வாமி ஸ்ரீஸுதர்ஶநரால் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளனவென்பது குறிக்கொள்ளத்தக்கது.

**க்ருதஜ்ஞதானுஸந்தாநங்கள்:** எளிதில் கிடைக்காத இந்நூலின் தெலுங்கு ப்ரதியைக் கொடுத்துதவிய, (ஸ்ரீபெரும்பூதூரில் ஆஸுரி பெரியஸ்வாமியென்றே ப்ரஸித்தராய் வாழ்ந்துவந்த மஹாஸ்வாமியினது பௌத்ரரான) **ஸ்ரீமான் உ.வே. திருஎவ்வுள் ஆஸுரி பாஷ்யகாரஸ்வாமி** திருவடிகளிலும் தெலுங்கு லிபியிலிருந்து தமிழ்மொழியில் எழுதிக்கொடுத்துதவிய (பெருமாள்கோயிலில் ஜடப்ரோல் ராஜகுரு ராகவாசார்யரென்றே ப்ரஸித்தராய் வாழ்ந்துவந்த மஹாஸ்வாமியினது கநிஷ்ட புத்ரரான) **ஸ்ரீமான் உ.வே. கோயில்கந்தாடை அண்ணன் ஸ்ரீரங்கராஜாசார்ய ஸ்வாமி** திருவடிகளிலும்; தெலுங்கு ப்ரதியையும், தமிழ் ப்ரதியையும் ஒப்பிட்டுப் பார்த்துத் திருத்தி அணிந்துரை எழுதிக்கொடுத்து, அச்சிடுவதற்கு த்ரவ்ய ஸஹாயமும் செய்துள்ள (ஸ்ரீபெரும்பூதூரில் திருநீர்மலை கோமடம் ஸ்ரீக்ருஷ்ணமாசார்யரென்றே ப்ரஸித்தராய் வாழ்ந்துவந்த மஹாஸ்வாமியினது பௌத்ரரான) **ஸ்ரீமான் உ.வே. திருநீர்மலை கோமடம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி** திருவடிகளிலும் இரண்டாம் முறையாக க்ரந்த பரிஶோதனை செய்துகொடுத்து உபஹரித்த **ஸ்ரீமான் உ.வே.கோயில் ஆத்தான் விஜயராக$_4$வாசார்ய ஸ்வாமி** திருவடிகளிலும் அடியேனது க்ருதஜ்ஞதானுஸந்த$_4$ாநங்களை விண்ணப்பித்து நிற்கிறேன்.

பெரியபெருமாள் தொடக்கமான நமது ஆசார்ய பரம்பரையின் ஸகலபூர்வாசார்யர்களுடைய திருவடிகளிலும், ஆராத$_4$னைக்குரிய எளிய அன்பு மலராய் இந்நூலினை ஸமர்ப்பிக்கிறேனடியேன்.

*தாஸாநுதாஸன்,*

அழகர் திருமலை மாடபூசி ஸ்ரீதர: ஸ்ரீநிவாஸன்



ஸ்ரீமத் க்ருபா மாத்ர ப்ரஸந்நாசார்யரும்,
ஸர்வோத்தாரகாசார்யருமான, தக்கோர் பரவும் தடஞ்சூழ்
பெரும்பூதூர் கருணைப் பெருவள்ளல்
**நங்கோயிலண்ணர்**

ஸ்ரீ:

யாமுநாசார்யர் அருளிச்செய்த

# ப்ரமேயரத்நம்

**ப்ரமேயரத்நம் ரமணீயப$_3$ாஹோ:**
**புரோத$_4$ஸா யாமுநதே$_3$ஶிகேந |**
**உத்$_3$த்$_4$ருத்ய வேத$_3$ாம்பு$_3$நிதே$_4$ரபாராத்**
**ப்ரோக்தம் மநோலங்க்ருதயே முமுக்ஷோ: ||**

(ஸுந்தரத்தோளுடையனான எம்பெருமானுடைய புரோஹிதரான யாமுநாசார்யரால் அபாரமான வேதக்கடலிலிருந்து 'ப்ரமேயரத்நம்' என்னும் இந்நூல் உத்த$_4$ரிக்கப்பட்டு முமுக்ஷுவான சேதநனின் மனதிற்கு அலங்காரமாக அருளிச்செய்யப்பட்டது.)

ஸமஸ்த கல்யாண கு$_3$ணாம்ருதோத$_3$தி$_4$யான ஸர்வேஶ்வரனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே ஸத்த்வோந்மேஷம் பிறந்து அதடியாக ஸத$_3$ாசார்ய வரணம் பண்ணியவனாலே ஸம்லப்$_3$த$_4$ ஜ்ஞாநனான ஸாத்த்விகனுக்கு ஜ்ஞாதவ்யமான அர்த்த$_2$ ப்ரமேயம் நான்கு. அவையாவன:- 1. வைஷ்ணவத்வமும், 2. ஆசார்ய வைப$_4$வமும், 3. உபாய விஶேஷமும், 4. உபேய யாத$_2$ாத்ம்யமும்.

## முதல் ப்ரகரணம் – வைஷ்ணவத்வம்

"காமயே வைஷ்ணவத்வம் து" என்று ஸநகாதிகள் ப்ரார்த்தித்தார்கள். "அறியக் கற்றுவல்லார் வைட்டணவராழ்கடல் ஞாலத்துள்ளே" யென்று **ப்ரத$_2$மாசார்யரும்** இதுவே ப$_2$லமாக வருளிச் செய்தார். "ப$_4$வநேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே" யென்று **யாமுநாசார்யரும்** இத்தையே அபேக்ஷித்தார். "தவ த$_3$ாஸ்ய மஹா ரஸஜ்ஞ:" என்று **ஆழ்வான்** அநுஸந்த$_4$ாநம். **ஆச்சான்பிள்ளை** முக்த பே$_4$ாக$_3$ாவளியைப் பண்ணிப் **பெரியவாச்சான்பிள்ளைக்குக்** காட்ட, எனக்கு சரமத்திலே பிறந்த ஜ்ஞாநம் உனக்கு ப்ரத$_2$மத்திலே பிறந்தது. ஆனாலும் என்னோடே வைஷ்ணவத்வத்தைக் கற்க வேணுமென்றருளிச் செய்தார்.

வைஷ்ணவத்வமாவது, குறிக்கோளும் சீர்மையும். அதாவது தனக்காசார்யன் தஞ்சமாக அருளிச் செய்த நல்வார்த்தைகளில் அவஹிதனாய்ப் போருகையும், அவ்வைஷ்ணவத்வ லக்ஷணத்தை யத$_2$ாவாக அறிகையும், தந்நிஷ்ட$_2$ர் பக்கலுத்$_3$தே$_3$ஶ்ய ப்ரதிபத்தியும். அந்த நல்வார்த்தைகளாவன - த்$_3$ருஷ்டாத்$_3$ருஷ்டங்கள் ப$_4$கவத$_3$தீ$_4$நங்களாக இருக்கும். அத்$_3$ருஷ்டமபேக்ஷிக்கவரும், த்$_3$ருஷ்டம் உபேக்ஷிக்க வரும் என்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். "நின்னையேதான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான் தன்னையே தான் வேண்டும் செல்வம்" என்று ப்ரமாணம். த்$_3$ருஷ்டம் அபேக்ஷித்தால் வாராது. *அத்$_3$ருஷ்டம் அபேக்ஷித்தால் வாராதென்று **நம்பிள்ளை** யருளிச் செய்வர். த்$_3$ருஷ்டத்தையும் ஈஶ்வரன் தலையிலே ஏறிடுவார் சில ஸாஹஸிகர்கள். அவர்களாரென்னில் ஸ்ரீகஜேந்த்ரனும், ப்ரஹ்லாதனும், பிள்ளை ப்ரபந்நரும். இவர்கள் மூவர்க்கும் மூன்றாபத்தை நீக்கினான் ஈஶ்வரன் என்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். இவர்கள் மூவரும் ஈஶ்வரனுடைய ஸௌகுமார்யத்திலநபி$_4$ஜ்ஞர். ஆஶ்ரயண வேளையில் ரக்ஷகனான ஈஶ்வரனும், அதிகாரி பூர்த்தியில் ரக்ஷ்யகோடியிலாம்படி அபூர்ணனாயிருப்பது. ஆகையிறே **பெரியாழ்வார்** "பல்லாண்டு பல்லாண்டெ"ன்று காப்பிட்டதும்; ஸ்ரீநந்தகோபரும் க்ருஷ்ணனுக்கு "ரக்ஷது த்வாம்" இத்யாதியாலே ரக்ஷையிட்டதும். ஆஶ்ரயண வேளையில் ஈஶ்வரனுக்கு அதிகாரி, ரக்ஷ்யன். அதி$_4$காரி பூர்த்தியில் ஈஶ்வரன் தான் குழைச்சரக்கென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர். ஆனால் த்$_3$ருஷ்டாத்$_3$ருஷ்டங்கள் ப$_4$க$_3$வத$_3$தீ$_4$நமாம்படி யென்னென்னில் த்$_3$ருஷ்டத்தை கர்மாநுகு$_3$ணமாக நிர்வஹிக்கும். அத்$_3$ருஷ்டத்தை க்ருபாநுகு$_3$ணமாக நிர்வஹிக்குமென்று **ஜீயர்** அருளிச் செய்வர். முக்தரை போ$_4$க$_3$ாநுகு$_3$ணமாகவும் முமுக்ஷுக்களை ஸ்வரூபாநுகு$_3$ணமாகவும்

---

* இந்த வாக்யத்தில் "அபேக்ஷித்தால்" என்ற இடத்தில் "உபேக்ஷித்தால் என்ற சப்தம் இருந்தால் பொருந்தும் என்று தோன்றுகிறது. வல்லார் வாய்க் கேட்டுணர்க.

ப3த்3த4ரை கர்மாநுகு3ணமாகவும் ரக்ஷிக்கும் என்று **எம்பார்** அருளிச் செய்வர். ஆக இத்தாலிறே ஈஶ்வரனுக்கு ஸர்வ ரக்ஷகத்வம். ஆனால் ஒருவனுக்கு புத்ரர்கள் ஒத்திருக்க ஒருத்தனை இந்த்3ர பத3த்திலே வைத்து ஒருத்தனை ரௌரவாதி நரகத்திலே தள்ளுமோபாதி ஸர்வ ரக்ஷகனான ஈஶ்வரனுக்கு ஸகல சேதநரோடும் நாராயணத்வப்ரயுக்தமான குடல் துடக்கொத்திருக்க ஒருத்தனைத் தெளி விசும்பான அந்தமில் பேரின்பத்திலே இனிதிருக்க ஒருத்தனிருள்தருமா ஞாலத்திலே இருந்தால் ஈஶ்வரனுக்கு வைஷம்ய நைர்க்4ருண்யங்கள் வாராதோவென்னில்; ராக்ஷஸன், திருவடி வாலிலே நெருப்பையிட, பிராட்டி ஸங்கல்பத்தாலே மயிர்க்கால் வழியிலே நீரேறிக் குளிர்ந்தாற்போலே சராசராத்மகமான ஸமஸ்த பதார்த்த2ங்களிலும் ஸத்தா தா4ரகனான ஈஶ்வரனுடைய இச்சா ரூபமான ஸௌஹார்த3மநுஸ்யூத மாகையாலே நைர்க்4ருண்யமில்லை. இந்த ஸௌஹார்த3ம் நித்யர் பக்கல் அஶூத்3தி4 ப்ரஸங்க3மில்லாமையாலே ஸ்பு2ரித்திருக்கும். ப3த்3த4ர் பக்கல் அநாதி3கர்ம திரோதா4ந ரூபையான அஶூத்3தி4யாலே ஸம்ஸார தந்த்ர வாஹியான அவனுடைய அந்த ஸௌஹார்த்த3ம் நித்யர் பக்கல் போலே ப்ரகாஶிக்கப் பெறாதே ஹிதபரத்வ ரூபமான கர்மாநுகுண ரக்ஷணம் நடக்கையாலே வைஷம்யமில்லை. ஆகையிறே “வைஷம்ய நைர்க்4ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்” என்று ஸூத்ரகாரரும் சொல்லிற்று. இத்தாலே ஈஶ்வரனுடைய ஸர்வ ரக்ஷகத்வத்துக்குக் குறையில்லை. “ஏக ஏவ ராஜா ஆக3தோ தே3வ ரூப: (ஈஶதே தே3வ ஏக:), “பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகுமங்காதும் சோராமே யாள்கின்ற வெம்பெருமான்” என்கிறபடியே ஸ்வதந்த்ரன் அவன் ஒருத்தனுமே – அவனையொழிந்த உபய விபூ4தியிலுள்ளார் அவனுக்குப் பரதந்த்ரர். “தா3ஸபூ4தாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:” என்று ப்ரமாணம். இப்படி பாரதந்த்ர்யம் ஸ்வரூபமாயிருக்கச் செய்தே, ப்ரஹ்மருத்ராதிகள் அவன் கொடுத்த ஐஶ்வர்ய விஶேஷத்தாலே அஹங்க்ருதராய்ப் போருவர்கள். தே3வாதி3கள் போ4கா3பா4ஸத்தாலே அஹங்க்ருதர். ரிஷிகள் தபோ

ப$_3$லத்தாலே அஹங்க்ருதர். மற்றுள்ளார் அஜ்ஞாநத்தாலே அஹங்க்ருதர். இவர்களுக்கு ஒருக்காலும் பாரதந்த்ர்யம் நடவாது, அதுண்டாயிற்றதாகிலும் மின்போலே க்ஷண ப$_4$ங்கு$_3$ரம், அது நிலை நிற்பது நித்ய ஸூரிகளுக்கு. அவர்கள் இந்த பாரதந்த்ர்யத்தையிட்டு ஒருங்கப் பிடித்ததென்னலாம்படி ப$_4$க$_3$வத$_3$பி$_4$மானமே வடிவாக இருப்பர்கள். அதென்போல வென்னில், மத்$_3$யாஹ்ந காலத்தில் புருஷன் சாயை அவன் காலுக்குள்ளே யடங்குமாப்போலே. ஒருவனுக்கு பூ$_4$ஷணாதிகள் ஸ்வம்மாக உண்டானால் பூணவுமாம், புடைக்கவுமாம் அறவிடவுமாம், ஒத்திவைக்கவுமாம், தா$_3$நம் பண்ணவுமாம், போலே ஸர்வவித$_4$ விநியோக$_3$ யோக்$_3$யமாய் அவனுக்கேயாய் இருக்குமாப்போலே ப$_4$க$_3$வத் பாரதந்த்ர்யம். ஒருவனுக்கொருவன் ஸ்நேஹித்தால் அவன் காலையும் செருப்பையும் உகக்குமாப்போலே பா$_4$க$_3$வத பாரதந்த்ர்யம். "எந்தம்மை விற்கவும் பெறுவார்களெ"ன்றும் "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலனெ"ன்றும் ப்ரமாணங்கள். இப்படிக்கு ஒத்த பாரதந்த்ர்யமில்லாமையாலே தே$_3$வதாந்தரங்கள் உத்$_3$தே$_3$ஶ்யமன்று. பாரதந்த்ர்யம் உடையவர்கள் உத்$_3$தே$_3$ஶ்யர். இவ்வர்த்த$_2$த்தைத் **திருமங்கையாழ்வார்** அருளிச் செய்தார். "மற்றுமோர் தெய்வம் உளதென்றிருப்பாரோடுற்றிலேன் உற்றதும் உன்னடியார்க்கடிமை" யென்றும், "மறந்தும் புறந்தொழா மாந்தரெ"ன்றும், "திருவில்லாத் தேவரைத் தேறேல்மின்", "தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து" என்கிறபடியே தே$_3$வதாந்தரங்களுக்கும் இழிதொழில்கள் செய்யக் கடவனல்லன். "நாந்யதா$_3$யதநம் வஸேத்" என்கிறபடியே அவர்களுடைய ஆலயங்களிலே வஸிக்கக் கடவனல்லன். "நாந்யம் தே$_3$வம் நிரீக்ஷயேத்" என்கிறபடியே அவர்களைக் கண்கொண்டு காணக் கடவனல்லன். இவர்கள் பகவச் சரீரபூதர்களா யிருந்தார்களேயாகிலும் அஹங்கார பிஶாசாவிஷ்டராகையாலே உபேக்ஷணீயர். ப்ரதிபு$_3$த்த$_3$ரானவர்கள் தே$_3$வதாந்தரங்களை ஸேவியார்களென்று ஶாஸ்த்ரம் சொல்லிற்று. ப$_4$க$_3$வத்$_3$ விஷயங்களைவிட்டு தே$_3$வதாந்தரங்களைப் பற்றுகையாவது



**ஸ்ரீமான் உ.வே. திருநீர்மலை கோமடம்**
**ஸ்ரீக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி**

அணிந்துரை எழுதியுபகரித்த ஸ்வாமியினுடைய பிதாமஹர்.
ஸ்ரீபெரும்பூதூரில் கோமடம் ஸ்வாமி என்றே ப்ரஸித்தராய் வாழ்ந்தவர்.

த்ருஷார்த்தனானவன் கங்கை பெருக்காக ஓடாநிற்க அதன் கரையிலே ஊற்றுக்கல்ல நினைக்கும் து3ர்பு3த்3தி4யைப் போலே. ப4க3வதா3ஶ்ரயணம் பண்ணினவனை தே3வதாந்தரங்கள்தான் அநுவர்த்திப்பார்கள். "ப்3ரணமந்தி தே3வதா:" என்று ப்ரமாணம். மயிரைப் பிளக்க வலிக்கச் சொல்லுகிற யமனும் "ப்ரபு4ரஹமந்ய ந்ருணாம் ந வைஷ்வணவாநாம்" என்றானிறே. ஆகையாலே இவர்களுக்கு ஒருக்காலும் யமவிஷயத்தை அடைகையில்லை. அப்படிக்கு ஶ்ருதியும் ஓதிற்று. "ந க2லு ப4ாக3வதா யமவிஷயம் க3ச்ச2ந்தி". ஆனால் இவனுக்கும் அநீதியுண்டானால் யம தர்ஶநம் பண்ணவேண்டாவோவென்னில் கிண்ணகப் பெருக்கில் துரும்புகொள்ள ஒண்ணாதவோபாதி அவனுக்கு ப4க3வத் க்ருபை ஏறிப் பாய்கையாலே யமாதி3தர்ஶநம் பண்ணவேண்டா. அவர்கள்தான் இவர்களுக்குக் கள்ளர் பட்டது படுவர்கள். "வள்ளலே உன்தமர்க்கென்றும் நமன்தமர்கள்ளர் போல்" - "நாவலிட்டுழி தருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே" என்னும்படியிறே இவர்களுடைய ப்ரப4ாவமிருக்கும்படி. இப்படிக்கொத்த பாரதந்த்ர்யத்தாலே ப4க3வச் ச2ரீர பூ4தராயிறே இருப்பது. ப4க3வதா3ஶ்ரயணத்துக்கு முன்பு அஸத்ப்ராயமாய், பின்பு தங்களை உண்டாகவிறே நினைப்பது. 'அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்' என்று ப்ரமாணம். ப4க3வதா3ஶ்ரயணத்துக்கு முன்பு காளராத்ரி. பின்பு ஸுப்ரபாதம். 'தாய்மடியிலே கிடந்துறங்குகிற ப்ரஜை ஸ்வப்நத்திலே புலியின் கையிலே அகப்பட்டு க்லேஶித்துக் கூப்பிடுமாபோலே எம்பெருமானை உணராத தசை. தாய்மடியிலே கிடந்துறங்குகிற ப்ரஜை கண்விழித்துத் தாய் முகத்தைப் பார்த்து நிர்ப4யமாயிருக்குமாபோலே எம்பெருமானை உணர்ந்த தசை' என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர். இவ்வதிகாரிக்கு ஈஶ்வரன் செய்த அம்ஶத்திலே க்ருதஜ்ஞதையும், செய்ய வேண்டும் அம்ஶத்தில் அபேக்ஷையும் நடக்க வேணும். "பெற்றதுவும் பிறவாமை" யென்று செய்த அம்ஶத்தில் க்ருஜ்ஞதை. "கண்ணாரக் கண்டுகொண்டு களிக்கின்றதிங்கென்று கொலோ" என்று செய்யவேண்டும்

அம்ஶத்திலே அபேக்ஷை நடக்கவேணும். மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொண்டு, உண்டியே உடையே உகந்தோடி மாரனார் வரிவெஞ்சிலைக்காட் செய்து அன்னவர்தம் பாடலோடாடலவை ஆதரித்து சதிரிள மடவார் தாழ்ச்சியை மதித்து அவர் தரும் கலவியே கருதியோடி ஐவர் திசை திசை வலித்து எற்றும்படி இந்த்ரியங்களுக்கு இரைதேடியிடாதே ஐம்புலனகத்தடக்குகை. இந்திரியங்களைப் பட்டினி கொள்ளவுமாகாது, பட்டி புக விடவுமாகாது. ஆகையாலே இவற்றை ஹ்ருஷீகேஶ ஸமர்ப்பணம் பண்ணி "கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்றெப்போதும் ப$_4$க$_3$வத் விஷயத்தைக் கேட்டும், "குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான் கோவிந்தன் என்னைப் புறம்புல்குவான்" என்று ப$_4$கவத் விகரஹத்தோடே ஸம்ஶ்லேஷித்தும், "கண்டேன் கன மகரக்குழை யிரண்டும் நான்கு தோளும்" என்கிறபடியே கண்ட கண்கள் வவ்வலிடும்படி குளிர்ந்து, "வாயவனையல்லது வாழ்த்தாதெ"ன்று வாயார ஸ்தோத்ரம் பண்ணியும், ப$_4$க$_3$வத்$_3$விக்$_3$ரஹ த$_3$ர்ஶநம் பண்ணியும், "கையுலகம் தாயவனை அல்லது தாம்தொழா"வென்று எப்பொழுதும் அஞ்சலி ப$_3$ந்த$_4$ம் பண்ணியும், "வலம் செய்து நாளும் மருவுதல் வழக்கெ"ன்று கால்கொண்டு பகவத் க்ஷேத்ரங்களை ப்ரதக்ஷிணம் பண்ணியும், "ப்ரியாய மம விஷ்ணோஶ்ச" என்கிறபடியே ப$_4$க$_3$வத் ப்ரீணநார்த்த$_2$மாக வர்ணாஶ்ரம தர்மங்களை வழுவாதபடி யநுஷ்டித்தும், ப்ராமாதி$_3$கமாக நழுவினாலும் அப்ரீதி விஷயமன்றிக்கே க்ருபா விஷயமாய்விடும் என்றும், வஸ்தவ்ய பூ$_4$மி கோயில் திருமலை தொடங்கியுண்டான அர்ச்சா ஸ்த$_2$லங்களென்றும், அந்த ஸ்த$_2$ல வாஸம்தான் ஶரீரபாதபர்யந்தமாகக் கடவதென்றும், "யாவச்ச$_2$ரீர பாதமத்ரைவ ஸ்ரீரங்கே$_3$ ஸுக$_2$மாஸ்வ" என்று பாஷ்யகாரருமருளிச் செய்தார். இப்படி ப்ராப்யஸ்த$_3$லங்களில்லாதபோது வைஷ்ணவ ஸஹவாஸம் பண்ணிப்போரவும். இவை இரண்டுமில்லாதபோது ப்ரேத பூமி வாஸத்தோபாதியாக நினைத்திருக்கவுமென்று துடங்கியுண்டான நல்வார்த்தைகள்.

ஸ்ரீப$_4$ாக$_3$வத சிஹ்நங்களாவன:- ப$_4$க$_3$வத் ஸம்ப$_3$ந்த$_4$ நாமதே$_4$யங்கள், திருநாமம், திருவிலச்சினை துடக்கமானவை. த்$_3$வயோச்சாரணம், ப$_4$க$_3$வத் ப்ரஸாத$_3$த$_4$ாரணம், அருளிச் செயல் துடக்கமான அநுஸந்த$_4$ாநங்கள்; "ரங்க$_3$ம் ரங்க$_3$மிதி ப்$_3$ரூயாத்" என்கிறபடியே தும்பினால் திருவரங்கமென்கையும், இதொழிய ஸ்த$_2$லாந்தரங்களைச் சொல்லாதொழிகையும். அதுக்கடியென்னென்னில், பெரிய திருமலையிலே வர்த்திப்பானொரு வைஷ்ணவன் பட்டர் கோஷ்டியிலே வந்து தும்மி 'திருவேங்கட'மென்ன, அவரார், கருவிலே திருவிலாதவர்?' என்றருளிச் செய்தார். இத்தைக் கேட்டு **அநந்தாழ்வான்** வெருவாதாள் வாய் வெருவி வேங்கடமே வேங்கடமே என்றாளோ திருவரங்கமென்றாளோ என்று பட்டருக்குச் சொல்லி வரக்காட்ட, அவர் கனாக்கண்டபடி யென்கொண்டு செவ்வடி குத்துகிறாரோ வென்றருளிச் செய்தார். பட்டர், திருவரங்கமென்பாரையும் நாக்கறுக்க வேணும் திருவரங்க மென்னாதாரையும் நாக்கறுக்க வேணுமென்று அருளிச் செய்வர். எங்ஙனேயென்னில், கோயிலுக்குப் போகிறோமென்னாமல் திருவரங்கத்துப் போகிறோமென்பாரையும் நாக்கறுக்க வேணும். தும்மி திருவரங்க மென்னாதாரையும் நாக்கறுக்க வேணுமென்றருளிச் செய்தார்.

தனக்கு யோக்யமாக விநியோகங்கொள்ளும் பதார்த்தங்கள் யாவை சில அவையெல்லாம் ப$_4$க$_3$வந் நிவேதி$_3$தமாக்கிக்கொள்ள வேணும். "யத$_3$ந்ந: புருஷோ ப$_4$வதி தத$_3$ந்நாஸ்தஸ்ய தே$_3$வதா:" என்று ப்ரமாணம். அந்த பதார்த்தங்கள் தான் ந்யாயார்ஜிதமாக வேணும். ப$_3$ாஹ்யங்களாகாது; குத்$_3$ருஷ்டிகளுடைய பத$_3$ார்த்த$_2$ங்களாகாது; அபி$_4$மாந தூ$_3$ஷிதருடைய பத$_3$ார்த்த$_2$ங்களாகாது; நாஸ்திகருடைய பத$_3$ார்த்த$_2$ங்களாகாது; ஶ்ராத்$_3$த$_4$ாதி$_3$களால் வரும் பத$_3$ார்த்த$_2$ங்களாகாது; ஒருவனுக்காகப் பண்ணும் ப$_4$க$_3$வத் ஸ்தோத்ரம் மந்த்ர ஜபம் திருவத்$_4$யயனம் துடங்கி யுண்டானவற்றால் வரும் பத$_3$ார்த்த$_2$ங்களாகாது. ஓதுவித்துக் கூலி

வாங்குதல் ஶ்ருத்யர்த்த$_2$மான அபி$_4$யுக்தருடைய ப்ரப$_3$ந்த$_4$ங்களை கூலிக்காக வோதுவிக்கலாகாது. ஒருவன் சோற்றுக்காக ப்ரபந்ந ப$_4$ாஷையும் பண்ணிப்போருவனென்று **ஆச்சான்பிள்ளை** யருளிச் செய்வர். தனியே ப்ரபந்நரென்று ஒரு ஜாதியும், ப்ரமேயமென்றொரு ப$_4$ாஷையுமாயிறே இருப்பது. ஸத்த்வ நிஷ்ட$_2$ன் ஸாத்த்விகனை நெருக்காமல் ஸம்ஸாரிகள் பக்கல் ஸாபேக்ஷனல்லாமல் யதே$_2$ாபாத்தங் கொண்டு ஜீவிக்கக்கடவனென்று நம்பிள்ளை அருளிச் செய்வர். ஸாத$_4$நாந்தரநிஷ்ட$_2$னை விஶேஷ தி$_3$வஸத்திலே காணலாம். ப்ரபந்நனை க்ஷாம காலம் வந்தவாறே காணலாமென்று நஞ்ஜீயரருளிச் செய்வர். ப்ரக்ருத்யாத்ம விவேகம் (பிறந்தவனை) க்ஷாம காலம் வந்தவாறே காணலாம். ப்ரபந்நனை விஶேஷ தி$_3$வஸங்களிலே காணலாம். அநந்ய ப்ரயோஜநனை விரஜைக்கரையிலே காணலாமென்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். "மனனகமல மறக்கழுவி" யென்று மநஸ்ஸிலுண்டான அஷ்டமலங்களற்றிருக்கவும், "ஸ்தி$_2$தமனஸம் தமவேஹி விஷ்ணு ப$_4$க்தம்" என்று ஶுத்$_3$த$_4$ மநாவாயிருக்கவும், சராசரமான பூ$_4$தங்களுடைய ப$_4$க$_3$வத்$_3$ விக்$_3$ரஹமென்றிருக்கையும், ஸர்வ பூ$_4$த த$_3$யை பண்ணுகையும், பரது$_3$:க்க$_2$து$_3$க்கி$_2$யாயிருக்கையும், பரஸம்ருத்$_3$தி$_4$ ப்ரயோஜநனா யிருக்கையும், ந்யாயோபாத்தமான த்$_3$ரவ்யத்தை ஸாத்த்விகரளவிலே ஸமவிப$_4$ாக$_3$ம் பண்ணிப் போருகையும், ப$_4$க$_3$வத்$_3$ விமுக$_2$ரான அஸாத்த்விகரளவிலே வ்யயியாதிருக்கையும், தனக்கு ஶேஷமான க்ருஹக்ஷேத்ர க்$_3$ராமாதி$_3$களோடு புத்ராதி$_3$களோடு மற்றுமுள்ள உபகரணங்களோடு வாசியற ப$_4$க$_3$வந்நாமதே$_4$யங்களும் ப$_4$க$_3$வந் முத்$_3$ரைகளும் த$_4$ரிப்பிக்கவும், ப$_4$க$_3$வத்$_3$ விமுக$_2$ரிடத்தில் ஸம்லாப தர்ஶநம் துடங்கியுண்டான ஸர்வத்தையும் த்யஜிக்கவும், "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்கிறபடியே காலக்ஷேபமாகவும். இப்படிக்கொத்த அர்த்த$_2$ங்களிலே அவஹிதனாய்ப் போருகையிறே குறிக்கோளாவது.



**ஸ்ரீமான் உ.வே. திருவெவ்வுளூர் ஆஸூரி**
**ராமாநுஜாசார்ய ஸ்வாமி**

இந்நூலின் தெலுங்கு ப்ரதியைக் கொடுத்துதவிய ஸ்வாமியின் பிதாமஹர் - ஆஸூரி பெரியஸ்வாமி என்றே ப்ரஸித்தராய் ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்ந்தவர்.

சீர்மையாவது இப்படிப்பட்ட அர்த்த நிஷ்டன் பக்கல் உத்$_3$தே$_3$ஶ்ய ப்ரதிபத்தி பண்ணுகை. எங்ஙனேயென்னில் "தண் சேறை எம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என்தலை மேலாரே" என்கிறபடியே ஶிரஸா வாஹ்யருமவர்களே. "எப்பொழுதும் என்மனத்தே இருக்கின்றாரெ"ன்கிறபடியே அந்தர்யாமியுமவர்கள். "கொண்டாடும் நெஞ்சுடையாரவர் எங்கள் குலதெய்வமெ"ன்கிறபடியே குலநாதருமவர்கள்; ஶேஷிகளுமவர்கள்; ஶரண்யரும் ப்ராப்யருமவர்களேயாயிருக்கும். "ப்ரப$_4$வோ ப$_4$கவத்$_3$ ப$_4$க்தா:" என்றும், "வைஷ்ணவ ஸம்ஶ்ரயா:", "ஸாத்$_4$யாஸ் ஸந்தி தே$_3$வா:" "ஞானத்தினொளியுருவை நினைவாரென் நாயகரே", "வணங்கு மனத்தாரவரை வணங்கென்தன் மடநெஞ்சே", "அடியவர்கள் தம்மடியான்" என்றும் ப்ரமாணம். எம்பெருமானில் தாழ்ந்தானொரு ஸ்ரீவைஷ்ணவனில்லை என்று எம்பார் அருளிச் செய்வர். பட்டருக்குக் கைக் கொடுத்துப் போனானொரு ஸ்ரீவைஷ்ணவன். ஒரு ஸ்ரீவைஷ்ணவனைக் காலை முடக்கென்ன "ஆழ்வார் திருத்தாளென்று பாடினார்; இவன் 'கால்' என்பா"னென்று அவனை விட்டருளினார். ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டால் உலாவுகின்ற கோவிலாழ்வார் என்றிருக்க வேணுமென்று நஞ்ஜீயரருளிச் செய்வர். "ஜங்க$_3$ம ஸ்ரீவிமாநாநி"யென்று ப்ரமாணம். வைஷ்ணவனுக்கொரு வைஷ்ணவனே உசாத்துணையென்று நம்பிள்ளை அருளிச் செய்வர். வருகிறவன் வைஷ்ணவனாகில் இருக்கிறவனும் வைஷ்ணவனாயிருக்குமென்று ஆச்சான் பிள்ளை அருளிச் செய்வர். பெரியநம்பி சரமத்திலே ஆழ்வான் மடியிலே கண்வளர, கோயிலும் பாஷ்யகாரரும் இருக்க, இங்கே ஶரீராவஸான மாவதே என்று வெறுக்க ஒரு ப$_4$ாக$_3$வதனுடைய மடியிற் காட்டில் கோயில் உத்க்ருஷ்டமன்றென்று அருளிச் செய்தார். இதில் ஜாதி நிரூபணமில்லை. "பயிலும் திருவுடையார் யவரேலுமவரெ"ன்று ப்ரமாணம். இவர்கள் ஜாதி நிரூபணம் பண்ணுகையிறே அஸஹ்யாபசாரமாவது. எங்ஙனேயென்னில், ப$_4$க$_3$வத$_3$பசார ப$_4$ாக$_3$வதாபசார அஸஹ்யாபசாரமென்று மூன்று. இதில்

ப$_4$க$_3$வத$_3$பசாரமாவது ஸ்வயத்ந ஸாத்$_4$யன் எம்பெருமானென்றிருக்கை. ப$_4$ாக$_3$வதாபசாரமாவது ஸ்ரீவைஷ்ணவ னோடொக்கத் தன்னையும் ஸமாந ப்ரதிபத்தி பண்ணுகை. அஸஹ்யாபசாரமாவது அர்ச்சாவதாரத்தினுடைய த்ரவ்ய நிரூபணம் பண்ணுதல், ஸ்ரீவைஷ்ணவனுடைய ஜாதி நிரூபணம் பண்ணுதலென்று ஜீயரளிச் செய்வர். பெரியநம்பி மாறனேரி நம்பியை ஸம்ஸ்கரித்தார். பட்டர் பிள்ளையுறங்காவில்லி த$_3$ாஸரை ஸம்ஸ்கரித்தார். பாஷ்யகாரர் நீராட எழுந்தருளும்போது மிளகாழ்வான் கையைப் பிடித்துக் கொண்டெழுந்தருளுவர். மீண்டெழுந்தருளும் போது பிள்ளையுறங்காவில்லி த$_3$ாஸர் கையைப் பிடித்துக் கொண்டெழுந்தருளுவர்.

ஸத்காரயோக்$_3$யர் ஸஹவாஸ யோக்யரென்றிரண்டு. ஸாத$_3$நாந்தர நிஷ்ட$_2$ன் ஸத்கார யோக்$_3$யன். ப்ரபத்தி நிஷ்ட$_2$ன் ஸஹவாஸ யோக்$_3$யனென்று **ஆச்சான் பிள்ளை** யருளிச் செய்வர். மருகாந்தாரத்தில் தண்ணீர்ப் பந்தலோபாதி ஸம்ஸாரத்தில் வைஷ்ணவ ஸஹவாஸமென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர்; க்ஷாம காலத்தில் அறச்சாலையோபாதி விபரீத பூ$_4$யிஷ்ட$_2$ தே$_3$ஶத்திலே வைஷ்ணவ ஸஹவாஸமென்று **இளையாழ்வாரான திருமாலையாண்டான்** அருளிச் செய்வர். ஒரு வைஷ்ணவனுக்குண்டான த்$_3$ருஷ்ட ஸங்கோசம் நாடு மாறாட்டத் தோபாதியும் கதிர் காணப் பசியோபாதியும் அபி$_4$ஷேகப் பட்டினி யோபாதியுமென்று **பெரியபிள்ளை** அருளிச் செய்வர். அம்ருதபாநத்தாலே ஜராமரண நாசமுண்டாமோபாதி வைஷ்ணவ க்$_3$ருஹத்திலம்பு$_3$ பாநத்தாலே ஸகல பாபங்களும் நஶிக்குமென்று **பிள்ளை**யருளிச் செய்வர். ஸ்வரூப நாஶகரோடு ஸஹவாஸம் பண்ணுகையும் அநர்த்த$_2$ம். ஸ்வரூப வர்த்த$_4$கரோடு ஸஹவாஸம் பண்ணாதொழிகையும் அநர்த்தமென்று **ஜீயர்** அருளிச் செய்வர். "நள்ளேன் கீழாரோடு, உயவே னுயர்ந்தவரோடல்லாலெ"ன்று ப்ரமாணம். இதில் ஸ்வரூப நாஶகராவார் - விழி எதிர்ப்பார், சுவர்புறம்

கேட்பார், ஸம்ப்ரதாயமற ஸ்வபு$_3$த்$_3$தி$_4$ ப$_3$லத்தாலே சொல்லுவார், ஒருத்தன் பக்கலிலே கேட்டு அங்குக் கேட்டிலோமென்பார், ஆசார்யன் பக்கலிலே அர்த்தத்தைக் கேட்டு அதில் ப்ரதிபத்தி பண்ணாதிருப்பார், அவனளவில் க்ருதஜ்ஞனன்றிக்கே க்ருத$_4$க்நனாய்ப் போருவார், க்$_2$யாதி லாப$_4$ பூஜைக்காகக் கேட்பார் இவர்கள். ஸ்வரூபவர்த்த$_4$கராவார், ஸத$_3$ாசார்யன் பக்கலிலே பரார்த்த$_2$மன்றியே ஸ்வார்த்த$_2$மாக ஏற்ற கலங்களென்னும்படி அர்த்த$_2$ ஶ்ரவணம் பண்ணுவாராய், அர்த்த$_2$த்திலே விஶ்வஸ்தருமாய் அந்த ஆசார்யன் பக்கலிலே க்ருதஜ்ஞருமாய் ஶரீரம் அர்த்த$_2$ம் ப்ராணமென்று துடங்கியுண்டான ஸர்வத்தையும் ஆசார்ய ஸமர்ப்பணம் பண்ணிப் போருவார் சிலராய் த்ரிவித$_4$கரணங்களாலும் ஆசார்யனைச் சாயை போலே பின் செல்லக்கடவர்களாய் ப்ரக்ருதி ஸங்க$_3$முடைய பித்ராதிகளையாகிலும் ததீ$_3$ய விஷய ஜ்ஞானமில்லையே யாகில் அவர்களை அநுவர்த்தியாதே இருப்பாருமாயே அவர்களோட்டை ஸ்பர்ஶம் உண்டாயிற்றதாகில் ஶூத்ர ஸ்பர்ஶத்தோபாதி ஸசேல ஸ்நாநம் பண்ணிப்போரக் கடவராய் அபி$_4$ஜந வித்யா வ்ருத்தங்களாகிற படுகுழியற்று ததீய$_3$ விஷயத்திலெப்போதுமாதரித்துப் போரக் கடவராய்; அவைஷ்ணவனை அநுவர்த்திக்கையும் அநர்த்த$_2$ம்; வைஷ்ணவனை அநுவர்த்தியாதொழிகையும் அநர்த்த$_2$ம் "அவைஷ்ணவ நமஸ்காராத்" என்று ப்ரமாணம்; உண்ணுஞ் சோறுண்டு போரக் கடவராய் ப்ரஸாத தீர்த்தங்களும் ப்ராப்த விஷயங்களிலே ப்ரதிபத்தி பண்ணிப் போரக் கடவராய் "உண்ணா நாள் பசியாவதொன்றில்லை" என்கிறபடியே ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தை யொழிந்தபோது உபவாஸத்தோபாதியென்று நினைத்திருக்குமவர்கள் ஸ்வரூப வர்த்த$_4$கராவார். **பெரியாண்டான்** திருத்தோரணம் துடங்கி அழகர் திருவடிகளறுதியாகப் பத்தெட்டு திவஸம் தண்டனிட்டுக் கிடப்பர். ராத்ரி மநுஷ்யர் போகும்போது **ஆண்டான்** கிடக்கிறாரோ பசு கிடக்கிறதோ வழிபார்த்துப் போங்கோளென்னும்படியிரே சலியாமல் ப$_4$க$_3$வத$_3$நுபவம் பண்ணும்படி.

இனி தீர்த்த ப்ரஸாதங்களும் பே$_4$ாஜநங்களும் நிரூபித்துக்கொள்ள வேணும். ஆழ்வானும் ஆண்டாளும் கோயில் நின்றும் தேஶாந்தரத்துக்குப் போய் மீண்டு வருகிறவளவிலே வழியிலவஸரிக்க இடமில்லாமல் கோயிலுக்கணித்தாக உபவாஸத்தோடே வந்து புகுந்தொரு மௌஷ்டிகன் வாசலிலே சடக்கென அமுது செய்தார். **ஆண்டாளை** அழைத்து ப்ரஸாதம் கூடச் சொன்ன அளவில் அவருடைய ரூப நாமம் கொண்டு அமுது செய்தீர். அவரெதிலே நிஷ்ட$_2$ரென்று தெரியாது. நான் அது செய்வதில்லை என்றாள். **ஆழ்வான்,** "உம்முடைய வ்யவஸாயத்தைப் பெருமாள் எனக்குத் தந்தருள வேணுமெ" ன்று வேண்டிக் கொண்டார். ஆகையாலே கேவல நாமரூபமுடையரான ஸாத$_4$நாந்தரநிஷ்ட$_2$ரகங்களில் ப்ரஸாதப் படுவானன்று. மந்த்ராந்தரங்களைக் கொண்டு பண்ணின ஸமாராதநத்தில் தீர்த்த ப்ரஸாதாதிகளும் ப்ரஸாதப் படுவானன்று. ஶ்ரீபாத தீர்த்தம் தான் த்$_3$விவித$_4$மென்று **ஜீயர்** அருளிச் செய்வர். இதரோபாய நிஷ்டர்களுடைய தீர்த்த$_2$ ப்ரஸாத$_3$ாத்$_3$யங்கீ$_3$காரமும் ஜ்ஞாநமாந்த்$_3$யஹேது. ப$_4$க$_3$வத்$_3$ உபாஸந நிஷ்ட$_2$ருடைய தீர்த்த$_2$ ப்ரஸாத$_3$ாத்$_3$யங்கீகாரமும் ஜ்ஞாநமாந்த்$_3$ய ஹேதுவென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர். வஶிஷ்டனுக்கும் விஶ்வாமித்ரனுக்குமுள்ள வாசி போரும் ப$_4$ாக$_3$வத தீர்த்த$_2$த்துக்கும் ப$_4$க$_3$வத் தீர்த்த$_2$த்துக்கும் என்று **இளையாழ்வாரான திருமாலையாண்டான்** அருளிச் செய்வர். கரும்புக்கும் கட்டிக்குமுண்டான வாசிபோருமென்று **பிள்ளை** அருளிச் செய்வர். கூட்டத் தேனுக்கும் படித்தேனுக்குமுள்ள வாசிபோருமென்று **நடுவில் திருவீதிப் பிள்ளை** அருளிச் செய்வர்; இப்படி ததீ$_3$ய விஶேஷத்தைப் பண்ணிக் கொண்டு போருகை சீர்மையாவது. ஆகையால் இப்படி குறிக்கோளும், சீர்மையும் உண்டாய்ப் போருகை வைஷ்ணவத்வமாவது.

வைஷ்ணவத்வம் என்னும் முதல் ப்ரகரணம் ஸம்பூர்ணம்



**ஸ்ரீமான் உ.வே. அழகர் திருமலை மாடபூசி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி**

இந்நூலைப் பதிப்பித்த அடியேனுடைய ப்ராசார்யர்/பிதாமஹர் - ஸ்ரீபெரும்பூதூரில் உழப்பாக்கம் ஸ்வாமியென்றே ப்ரஸித்தராய் வாழ்ந்தவர்.

## இரண்டாம் ப்ரகரணம் – ஆசார்ய வைபவம்

அநந்தரம் ஆசார்ய வைபவம் ப்ரதிபாதி₃க்கப்படுகிறது. எங்ஙனே என்னில், ஆசரித்துக் காட்டுமவன் ஆசார்யன், விஶேஷ த₄ர்மங்களைக் குறித்து உபதேஶிக்கிறான் யாவனொருவன் அவன் ஆசார்யனாகிறான். அஜ்ஞானத்தை அகலும்படி பண்ணி ஜ்ஞாநத்தைப் புகுரும்படி பண்ணி ருசியைக் கொழுந்தோடும்படி பண்ணுகை ஆசார்யக்ருத்யம் என்று **எம்பார்** அருளிச் செய்வர். ஆசார்ய பதமென்று தனியே ஒன்றுண்டு. அதுள்ளது எம்பெருமானார்க்கென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். ஶிஷ்யாசார்ய க்ரமத்துக்கு ஸீமாபூ₄மி **கூரத்தாழ்வான்.** எங்ஙனேயென்னில், தம்மளவிலே உடையவர் நிக்₃ரஹம் பண்ணினாரென்று கேட்டு இவ்வாத்மா அவருக்கே ஶேஷமாயிருந்ததாகில் விநியோக₃ ப்ரகாரம் கொண்டு கார்யமென் என்று அருளிச் செய்கையாலே ஶிஷ்யர்க்கு ஸீமா பூ₄மி. ஸாபராத₄னான நாலூரானை நான் பெற்ற லோகம் நாலூரானும் பெற வேணுமென்கையாலே ஆசார்யர்களுக்கு ஸீமா பூ₄மி. அதி₄காரியினுடைய ஆர்த்தியைக் கண்டு ஐயோ வென்னுமவனாசார்யன். அர்ச்சாவதாரத்தினுடைய உபாத₃ாந த்ரவ்ய நிரூபணம் பண்ணுகையும், ஆசார்யனை மநுஷ்ய ஜன்ம நிரூபணமும் நரக ஹேதுவென்று ஶாஸ்த்ரம் சொல்லும். மந்த்ரத்திலும் மந்த்ர ப்ரதிபாத்₃யனான ஈஶ்வரன் பக்கலிலும் மந்த்ர ப்ரத₃னான ஆசார்யன் பக்கலிலும் எப்போது மொக்க ப₄க்தியைப் பண்ணிப்போரவேணும். ஆசார்யனையும் எம்பெருமானையும் பார்த்தால் ஆசார்யன் அதி₄கன். எங்ஙனேயென்னில், ஈஶ்வரன் தானும் ஆசார்ய பத₃மேற ஆசைப்பட்டான். "பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்" தென்றும், "ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம்" என்றும் சொல்லும்படியே அர்ஜுநனுக்கு ஸ்ரீகீ₃தோபதே₃ஶமுக₂த்தாலே ஆசார்ய பதம் நிர்வஹித்தான். த்₄ருவனுக்கு ஸ்ரீபாஞ்சஜந்ய முக₂த்தாலே ஜ்ஞாநோபதேஶம் பண்ணினான். ஆகையால் ஆசார்ய

பதம் நிர்வஹித்தான். ஈஶ்வராபி$_4$மானமின்றியே ஆசார்யாபி$_4$மானத்தாலே மோக்ஷ ஸந்தி$_4$யுண்டு. இது க$_4$ண்டாகர்ணன் பக்கலிலே காணலாம். ஆசார்யாங்கீகாரமே உத்தாரக ஹேதுவென்னுமிடம் பாபிஷ்ட$_2$னுக்குத் தலையான க்ஷத்ரப$_3$ந்து$_4$வின் பக்கலிலும் காணப்படும்; புண்யோத்தமருக்குத் தலையான புண்டரீகனோடொக்கப் பெறுகையாலே. சக்ஷுஷ்மான் அந்த$_4$னை அபி$_4$ மத தே$_3$ஶத்திலே நடப்பிக்குமோபாதியும், பங்குவை நாவிகனானவன் ஓடத்திலே வைத்து அக்கரைப்படுத்துமோபாதியும், ராஜ வல்லப$_4$னான புருஷன் அவன் பக்கல் பெற்ற ஐஶ்வர்யத்தை இவனை அறியாத புத்ரமித்ராதிகளை பு$_4$ஜிப்பிக்குமோபாதியும். வைராக்$_3$யத்தில் விஞ்சின லாபமில்லை. ஜ்ஞாநத்தில் விஞ்சின ஸுக$_2$மில்லை. ஸம்ஸாரத்தில் விஞ்ஜின து$_3$:க$_2$மில்லை. அப்படியே ஆசார்யனில் விஞ்சின ரக்ஷகரில்லை. நவத்$_3$வாரபுரியான லங்கையிலே ராக்ஷஸிகளாலே ஈடுபடா நிற்கிற பிராட்டிக்குத் திருவடியினுடைய தோற்றரவு போலே நவத்$_3$வாரபுரமான தேஹத்திலே தாபத்ரயங்களாலே ஈடுபடா நிற்கிற சேதநனுக்கு ஆசார்யனுடைய தோற்றரவு என்று எம்பாரருளிச் செய்வர். அவன் கொடுத்த திருவாழி மோதிரத்தைக் கொண்டவள் ஆஶ்வஸ்த்தையாமோபாதி இவ்வாசார்யன் ப்ரதிபாதிக்கும் மந்த்ரரத்நத்தாலே இவ்வதி$_4$காரியும் ஆஸ்வஸ்தனாகாநிற்கும். விஞ்சின ஆபத்து வந்தாலும் ஆசார்யனுடைய வார்த்தையே த$_4$ாரகமாகக் கடவது, "ஜ்ஞாதம் மயா வஸிஷ்டே$_2$ந புரா கீ$_3$தம் மஹாத்மநா | மஹத்யாபதி$_3$ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ ப$_4$க$_3$வாந் ஹரி: ||" என்று ப்ரமாணம்.

ஆழ்வார்களெல்லாரும் உத்தே$_3$ஶ்யராயிருக்க ப்ரத$_2$மாசார்யராகையாலேயிறே நம்மாழ்வாரென்று பேராகிறது. ஸ்ரீபூ$_4$மி ப்ரப்$_4$ருதிகளான நாய்ச்சிமாரெல்லாரு மொத்திருக்கப் பிராட்டிக்கேற்றம் குருபரம்பரைக்குத் தலையாகையிறே. ஆசார்யத்வ பூர்த்தியுள்ளது பிராட்டிக்கு. எங்ஙனேயென்னில், ப$_4$க$_3$வத்$_3$ விமுக$_2$னாய் ஸாபராத$_4$னுமான ராவணனுக்கு ப$_4$க$_3$வது$_3$பதே$_3$ஶம்

பண்ணுகையாலே. "விதி$_3$தஸ் ஸஹி த$_4$ர்மஜ்ஞ*ஶ*ரணாக$_3$த வத்ஸல: | தேந மைத்ரீ ப$_4$வது தே யதி$_3$ ஜீவிதுமிச்ச$_2$ஸி" என்று ப்ரமாணம். இப்படி தே$_3$ாஷம் பாராமல் ஹித ப்ரவர்த்தகத்வமுள்ளது பிராட்டிக்கும் கூரத்தாழ்வானுக்குமிறே. ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஆச்சான் பிள்ளையை ஆசார்ய லக்ஷணமேதென்று கேட்க தத்த்வோபதே$_3$*ஶ*த்தில் *ஶு*த்த$_4$ ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகத்வம், அதுள்ளது நம்பிள்ளைக்கும் நஞ்ஜீயருக்கும் என்றருளிச் செய்தார். நம்பிள்ளை திருமாளிகைக்கு நடுவில் திருவீதிப் பிள்ளை செங்கல் சுமந்துவர, ஆசார்யராகும்போது ஆசரித்துக் காட்ட வேண்டுமிறே என்றருளிச் செய்தார். அக்ஷர*ஶி*க்ஷகன் ஆசார்யனன்று. ஆம்நாயாத்யாபகன் ஆசார்யனன்று. *ஶ*ாஸ்த்ரோபதே$_3$ஷ்டா ஆசார்யனன்று. மந்த்ராந்தரோபதே$_3$ஷ்டா ஆசார்யனன்று. ஸாத$_4$நாந்தரோபதே$_3$ஷ்டா ஆசார்யனன்று. **த்$_3$வயோபதே$_3$ஷ்டாவே ஆசார்யனாகக் கடவன்.** ப$_4$ாஷ்யகாரரும் ஆழ்வான் தே$_3$*ஶ*ாந்தரத்தில் நின்றும் வரக்கண்ட ப்ரீத்யதி*ஶ*யத்தாலே மீண்டும் த்$_3$வயத்தை உபதே$_3$*ஶி*த்தருளினார். நம்பிள்ளை புருஷகாரமாக ஒருத்தன் ஜீயரை ஆ*ஶ்*ரயிக்க வர அவனுக்கு பூர்வ வாக்யத்தை உபதே$_3$*ஶி*க்க "இடையனெறிந்த மரமே ஒத்திராமே யடைய அருளா"யென்று பிள்ளை விண்ணப்பம் செய்ய உத்தர வாக்யத்தை உபதே$_3$*ஶி*த்தருளினார். திருமந்த்ரத்திலே பிறந்து த்$_3$வயத்திலே வளர்ந்து த்$_3$வயைக நிஷ்டராவீரென்றிறே அநந்தாழ்வான் வார்த்தை. ஆழ்வார்க்கும் ஆசார்யத்வ பூர்த்தி திருவாய்மொழியை வ்யாஜீகரித்து த்$_3$வயத்தை அருளிச் செய்கையாலே என்று **இளையாழ்வாரான திருமாலையாண்டானருளிச் செய்வர்.** ஆகையிறே திருவாய்மொழி தீ$_3$ர்க்க$_4$ *ஶ*ரணாகதி$_3$யென்று பேராகிறது. வி*ஶே*ஷித்து ப்ரபத்தியினுடைய அர்த்தத்தை நோற்ற நோன்பு, ஆராவமுது, மானேய் நோக்கு, பிறந்தவாறு இவற்றிலே வெளியிட்டாரிறே. *ஶ*ரணாகதியும் திருவாய்மொழியுமாக இரண்டுமிறே த்$_3$வயமென்று போருகிறதென்று **பெரியாண்டானருளிச்** செய்வர். ப்ரபத்தியில் பூர்வ வாக்ய உத்தர வாக்ய பே$_4$த$_3$த்தோபாதியிறே த்$_3$வயத்துக்கும் திருவாய்மொழிக்குமுள்ள வாசியென்று **எம்பார்**

அருளிச் செய்வர். திருவாய்மொழியினுடைய அர்த்த$_2$த்தை ப்ரதிபாதிக்கிறான் யாவனொருவன் அவன் த்$_3$வயார்த்த ப்ரதிபாதகனென்று **பெரியபிள்ளை** அருளிச் செய்வர். இவ்விரண்டு அர்த்த$_2$த்தையும் ப்ரதிபாதிக்கிறான் யாவனொருவன் அவனுக்கிறே ஆசார்ய பூர்த்தியுள்ளதென்று **ஜீயர்** அருளிச் செய்வர். ப$_4$ாஷ்யகாரருக்கு, இவை இரண்டுக்கும் ஶப்$_3$த$_3$ ப்ரதிபாத$_3$கர் இருவரும், அர்த்த$_2$ ப்ரதிபாத$_3$கர் இருவரும், ஆரென்னில், **பெரியநம்பி** த்$_3$வயத்தை உபதே$_3$ஶித்தருளினார். த்$_3$வயார்த்த$_2$த்தை அருளிச் செய்தார் **திருக்கோட்டியூர் நம்பி. ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர்** திருவாய்மொழி ஓதுவித்தருளினார். திருவாய்மொழியினுடைய அர்த்தத்தை அருளிச் செய்தார் **திருமாலையாண்டான்.** இவை இரண்டுக்கும் ப்ரவர்த்தகராவார்களிறே ஆசார்ய பதமேறிப் போந்தவர்கள். அவர்களாரென்னில் **நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், உடையவர், எம்பார், பட்டர், நஞ்ஜீயர், நம்பிள்ளை.** இவர்களில் வைத்துக் கொண்டு ஶப்$_3$த$_3$ ப்ரத$_3$னான ஆசார்யனிலும் அர்த்த$_2$ ப்ரத$_3$னானவன் அதி$_4$கன், அவ்வாசார்யனுடைய ஏற்றமிவன் ப்ரதிபாதிக்கையாலே. ஆசார்யர்களெல்லாரும் சேரவிருந்து எங்கள் ஶிஷ்யர்கள் உம்மை ஸேவிக்கைக்கு அடியென்னென்று **ஆச்சான் பிள்ளையைக்** கேட்டருள, உங்களுக்குப் போகாதே இருப்பதொன்றுமாய் இவர்களுக்கு அபேக்ஷிதமாயிருப்பதொரு அர்த்தம் எனக்குப் போம். எங்ஙனே என்னில் த்$_3$வயத்தை உபதேஶித்துப் பெருமாளுடைய ஏற்றத்தையும் அருளிச் செய்திகோள் நீங்கள். உங்களுடைய ஏற்றம் உங்களுக்குப் போகாது. அது நான் சொல்ல வல்லேனென்று அருளிச் செய்தார். கருந்தறையில் உபதேஶிக்கிற ஆசார்யன், திருவிளையாட்டமாம்படி திருவாழிக்கல்லு நாட்டினானோபாதி, இவனைத் திருத்துகிற ஆசார்யன் திருவிளையாட்டத்தைத் திருநந்தவனமாக்கி அதிலுண்டான திருப்படித் தாமத்தை ப$_4$க$_3$வதே$_3$க பே$_4$าக$_3$மாம்படி பண்ணுகிறவனோபாதியென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர். கருந்தறையிலுபதேஶித்தவனே



**ஸ்ரீமான் உ.வே. அழகர் திருமலை மாடபூசி ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி**

இந்நூலைப் பதிப்பித்த அடியேனுடைய ஆசார்யர்/கநிஷ்ட பிதாமஹர் - "உழப்பாக்கம் ஸ்வாமி" என்றே ப்ரஸித்தராய் திருவல்லிக்கேணியில் வாழ்ந்தவர்.

ஆசாரியன். ஸ்வரூப வர்த்$_3$த$_4$கனான ஆசாரியன் உபகாரகனென்று **ஆச்சான் பிள்ளை** அருளிச் செய்வர். ஸ்வாசார்ய வைபவத்தை வெளியிடுகையே ஆசார்ய க்ருத்யம், எங்ஙனே யென்னில், **நடுவில் திருவீதிப்பிள்ளை,** "உன்னோடுடனே ஒரு கடலில் வாழ்வாரை இன்னாரினையார் என்றெண்ணுவாரில்லை காண்" என்கிற பாட்டை அருளிச் செய்கிறவளவிலே, கூரகுலத்திலே பல பிள்ளைகள் பிறந்திருக்கச் செய்தேயும் பிள்ளையை ஸேவித்த ஏற்றம் எனக்குண்டானாற் போலே என்றருளிச் செய்தார். **தெற்காழ்வான்-பட்டர் நம்பிள்ளை** பக்கலிலே ஸ்ரீராமாயணத்தைக் கேட்டுப் பெருமாள் திருவோலக்கத்திலே வாசிக்கச் செய்தே **பிள்ளை** கொண்டாட, நட்டுவனார் தாமே கொண்டாடுமோபாதி **பிள்ளை** என்னைக் கொண்டாடுகிறபடி என்றருளிச் செய்தார். ஒரு கிணற்றிலே விழுந்தானொருத்தனை இரண்டு பேராக எடுக்குமோபாதியிறே **ப$_4$ாஷ்யகாரரும் எம்பாருமாக** என்னை உத்$_3$த$_4$ரித்தபடியென்று **பெரியாண்டானருளிச் செய்தார். ப$_4$ாஷ்யகாரர் ஆளவந்தாருக்கு** நான் ஏகலவ்யனோபாதி யென்றருளிச் செய்வர். எங்ஙனே என்னில் **பாஷ்யகாரர் திருமாலையாண்டான்** பக்கலிலே திருவாய்மொழி கேட்கிற நாளிலே "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து" என்கிற பாட்டை அருளிச் செய்கிற அளவிலே யத$_2$ாந்வயமாக நிர்வஹிக்க **ப$_4$ாஷ்யகாரர்** இது அநுசிதமென்று அந்வயித்துப் பொருளுரைக்க, உம்முடைய வி*ஶ்*வாமித்ர ஸ்ருஷ்டி வீர், நாம் **பெரியமுதலியார்** பக்கல் கேட்ட அர்த்த$_2$மிதுவே காணுமென்றிவர்க்குத் திருவாய்மொழி அருளிச் செய்யாமலிருக்க, பின்பொரு காலத்திலே **திருக்கோட்டியூர் நம்பி இளையாழ்வார்** திருவாய்மொழி கேட்டுப் போரா நின்றாரோ என்று **திருமாலையாண்டானைக்** கேட்டருள அங்குப் பிறந்த வ்ருத்தாந்தத்தை அவரும் அருளிச் செய்ய **பெரியமுதலியார்** திருவாய்மொழி இரண்டாமுரு அருளிச்செய்கிறபோது ப$_4$ாஷ்யகாரோக்தி க்ரமத்திலே யென்று **திருக்கோட்டியூர் நம்பி** அருளிச்செய்ய, ப$_4$ாஷ்யகாரரை அழைத்து **ஆளவந்தார்** திருவுள்ளத்திலே ப்ரகா*ஶி*க்குமதுவே ஒழிய இவர்க்கு

ப்ரகாஶிக்குமாவென்று **திருமாலையாண்டான்** அருளிச் செய்ய, **ப$_4$ாஷ்யகாரர் ஆளவந்தாருக்கு** நான் ஏகலவ்யனோபாதி என்றருளிச் செய்தார். ப்ரவர்த்தகனை வலிய அழைத்தாகிலும் இவ்வர்த்த$_2$த்தை உபதேஶிக்கை ஆசார்ய க்ருத்யம். எங்ஙனே யென்னில் குளப்படியில் நீரைத் தேக்கினால் நின்று வற்றிப்போம். வீராணத் தேரியிலே தேக்கினால் நாட்டுக்கு உபகாரகமாம். ஆகையால் இவ்வர்த்த$_2$த்தை **ஆளவந்தாருக்கு** உபதே$_3$ஶியுமென்று **உய்யக்கொண்டாரைப்** பார்த்து **நாதமுநிகள்** அருளிச் செய்தார். **ஆளவந்தாரும்** ஸ்தோத்ரத்தை அருளிச் செய்து **பெரியநம்பி** கையிலே கொடுத்து **ப$_4$ாஷ்யகாரர்** பக்கலேறப் போகவிட்டருளினார். ஆக ஆசார்யர்கள் ப்ரத$_2$மோபதே$_3$ஷ்டாவான ஆசார்யனிலும் ஸ்வரூப வர்த்$_3$த$_4$கனான ஆசார்யனளவிலே நிரந்தர ஸேவை பண்ணிப் போருவர்கள். அவர்கள் ஆரென்னில் **எம்பார் திருமலைநம்பி** ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்து **ப$_4$ாஷ்யகாரர்** பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார். **வங்கிபுரத்து நம்பி திருமாலையாண்டான்** ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்து **ஸ்ரீபாஷ்யகாரர்** பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார். **நாலூராண்டான் ஆளவந்தார்** ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்து **திருமாலையாண்டான்** பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார். **பெரியாண்டான் ப$_4$ாஷ்யகாரர்** ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்து **எம்பார்** பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார். **பெரியபிள்ளை இளையாழ்வாரான திருமாலையாண்டான்** ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்து **நம்பிள்ளை** பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார். **ஸ்ரீஸேனாபதி ஜீயர் நஞ்ஜீயர்** பாதத்திலே ஆஶ்ரயித்து **நம்பிள்ளை** பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார். ஆகையாலே ஸ்வரூப வர்த்$_3$த$_4$கனான ஆசார்யன் பக்கலிலே விஶேஷ ப்ரதிபத்தி நடக்க வேணும். ஆகையிறே **நம்மாழ்வார்** என்னுமோபாதி **நம்பிள்ளை** யென்று பேராகிறது. அவரை ப்ரத$_2$மாசார்யரென்னுமோபாதி இவரை லோகாசார்யரென்று போருகிறது. அவரைத் **திருநாவீறுடையபிரான்** என்னுமோபாதி இவரை **நாவீறுடையபிரான்** என்று போருகிறது. ஆகையாலே

ஆசார்யனிவ்வதி$_4$காரியினுடைய ஆத்ம யாத்ரைக்குக் கடவராய்ப் போரும். ஆசார்யனுடைய தே$_3$ஹ யாத்ரை ஶிஷ்யனுக்கு ஆத்ம யாத்ரையாய்ப் போரும். இவ்வாசார்ய ப$_4$ரந்யாஸம் பண்ணினவர்களுக்கு எல்லை நிலம் **நாய்ச்சியாரும் மது$_4$ரகவிகளும்.** எங்ஙனே என்னில் "விட்டு சித்தர் தங்கள் தேவரை வருவிப்பரேலது காண்டுமென்று" **நாய்ச்சியார்.** ஈஶ்வரன் முழங்கை தண்ணீர் வேண்டுவதில்லை. **பெரியாழ்வார்** தாளத்தைத் தட்டி அழைக்கவுமாம். ஶாண் தொடையைக் கட்டி அழைக்கவுமாம் என்று அவர் பக்கலிலே ப$_4$ரந்யாஸம் பண்ணினார். **ஸ்ரீமதுரகவியாழ்வாரும் ஆழ்வார்** பக்கலிலே ப$_4$ரந்யாஸம் பண்ணினார். **ஆசார்யனான ஆழ்வாரை ஶேஷியாகவும் ஶரண்யராகவும் ப்ராப்யராகவும் ப்ராபகராகவும் அநுஸந்தித்தார்.** "பெரியவண் குருகூர் நகர் நம்பிக்கு ஆளுரியனாய்" என்றும் "பண்டை வல்வினை பாற்றி அருளினானெ"ன்றும் "தென்குருகூர் நகர் நம்பிக்கன்பனா"யென்றும். "பரமகு$_3$ரும் ப$_4$க$_3$வந்தம் ப்ரணம்ய"வென்று பரமாசார்யபூ$_4$தனான ஈஶ்வரனிற் காட்டிலும் ஆசார்யன் அதி$_4$கன். ஆசார்ய பாரம்பர்யத்தில் ஸ்வாசார்யனதி$_4$கன். அவ்வாசார்யனிற் காட்டில் தன் வைபவ ப்ரதிபாத$_3$கனுமாய் இவனுக்கு ப்ரகாரனுமாய் ஸ்வரூப வர்த்$_3$த$_4$கனான ஆசார்யனதி$_4$கன். ஆக ஏவம் ரூபமாயிருக்கும் ஆசார்ய வைப$_4$வம்.

ஆசார்ய வைபவம் என்னும் இரண்டாம் ப்ரகரணம் ஸம்பூர்ணம்.

## மூன்றாம் ப்ரகரணம் – உபாய வைப$_4$வம்

அநந்தரம் உபாய வைப$_4$வம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. எங்ஙனே என்னில் சதுர்த$_3$ஶ வித்$_3$யாஸ்தாநங்களாலும் அறுதியிடப்பட்ட உபாயம் நாலு வகையாயிருக்கும். கர்மமென்றும், ஜ்ஞானமென்றும், ப$_4$க்தியென்றும், ப்ரபத்தியென்றும், இதில் கர்மமாவது நித்ய நைமித்திக காம்யமென்று மூன்று வகையாயிருக்கும். நித்யமாவது ஸந்த்$_3$யாவந்தநம் துடக்கமானவை. நைமித்திகமாவது க்$_3$ருஹத$_3$ஹநாதிக்கு ப்ரோக்ஷணாதி$_3$. காம்யமாவது ப$_2$லத்தைக் கோலி அநுஷ்டிக்குமவை. இன்னமும் யஜ்ஞம், த$_3$ாநம், தபஸ்ஸு தீர்த்த யாத்ரையென்று துடங்கியுண்டானவை பலவகையாயிருக்கும். ஜ்ஞாநமும் ஸத்$_3$வித்$_3$யை, த$_3$ஹர வித்யை, அந்தராதி$_3$த்ய வித்$_3$யை என்று துடங்கி ப$_3$ஹு விதை$_4$யாமாயிருக்கும். இதில் ஸத்$_3$வித்$_3$யையாவது ஸ்வரூபோபாஸந ஜ்ஞாநம். த$_3$ஹரவித்$_3$யையாவது கு$_3$ணோபாஸந ஜ்ஞாநம். அந்தராதி$_3$த்ய வித்$_3$யையாவது ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தியாக த்$_4$யானம் பண்ணி உபாஸிக்கிற ஜ்ஞாநம். இனி ப$_4$க்தியும் ப$_3$ஹுவிதை$_4$யாயிருக்கும். த்யாநம், அர்ச்சநம், ப்ரணாமம், ப்ரத$_3$க்ஷிணம், ஸ்தோத்ரமென்று துடங்கியுண்டானவற்றாலே. ப$_4$க்திதான் மூன்று வகையாயிருக்கும் - ப$_4$க்தியென்றும் பரப$_4$க்தியென்றும் பரம ப$_4$க்தியென்றும். இதில் ப$_4$க்தியாவது ஸ்வாமியான நாராயணன் பக்கல் த$_3$ாஸபூ$_4$தனான இச்சேதநனுடைய ஸ்நேஹமடியான வ்ருத்தி. பரப$_4$க்தியாவது ஸம்ஶ்லேஷத்தில் ஸௌக்யமும் விஶ்லேஷத்தில் து$_3$:க$_2$மும். பரம ப$_4$க்தியாவது ப$_4$க$_3$வத்$_3$ விஶ்லேஷத்தில் ஸத்தாநாஶம் பிறக்கும்படியான அவஸ்தை. இவ்வுபாயமிரண்டும் உபாஸநாத்மகமாகில் பே$_4$தமென்னென்னில், பய: பரிபாக த$_3$ஶைபோலே ப$_4$க்தி, அதினுடைய விபாகதஶைபோலே ஜ்ஞாநமும். "மயர்வற மதிநலமருளினன்" என்று ஆழ்வாருக்கும் பக்தி ரூபாபந்ந ஜ்ஞாநத்தையிறே ஸர்வஜ்ஞனான ஸர்வேஶ்வரன் ப்ரகாஶிப்பித்தது. இவ்வுபாய த்ரயமும் அந்யோந்யம் ஒன்றங்கியாய்

இரண்டு அங்கங்களாயிருக்கும். இதில் ஜ்ஞாந ப$_4$க்திகளோடு கூடின கர்மத்தாலே ஜநகாதி$_3$கள் முக்தரானார்கள். கர்ம ப$_4$க்திகளோடு கூடின ஜ்ஞாநத்தாலே ப$_4$ரதாதி$_3$கள் முக்தரானார்கள். கர்ம ஜ்ஞாநங்களோடு கூடின ப$_4$க்தியாலே ப்ரஹ்லாத$_3$ாதி$_3$கள் முக்தரானார்கள். இதுக்கு ஹேது அதி$_4$காரிகளுடைய அபி$_4$ஸந்தி$_4$பே$_4$த$_3$ம். இதில் *ஶ*ாஸ்த்ர ஜந்ய ஜ்ஞாநமாயிருக்கும் ஜ்ஞாநம், விவேக ஜந்ய ஜ்ஞாநமாயிருக்கும் ப$_4$க்தியென்று **ஜீயர்** அருளிச் செய்வர். பத்துடை அடியவர்க்கு எளியவன் என்றிருக்கை முடவனுக்கு ஆனை வளைந்து கொடுக்குமாப் போலே என்று **நடுவில் திருவீதிப்பிள்ளை**யருளிச் செய்வர். அநந்தரோபாயம் ப்ரபத$_3$நமாயிருக்கும். கீழ்ச் சொன்ன உபாயங்கள் *ஶ*ாஸ்த்ர ஜந்யங்கள், இந்த உபாயம் உபதே$_3$*ஶ* ஸித்$_3$த$_4$மென்று **நம்பிள்ளை** அருளிச் செய்வர். கீழ்ச் சொன்ன உபாயங்கள் ஸாத்$_4$யங்களாயிருக்கும். இது ஸித்$_3$த$_4$மாயிருக்கும். அவை அசேதநங்களாயிருக்கும். இது அத்$_3$விதீயமாயிருக்கும்; அவை த்யாஜ்யங்களாயிருக்கும். இது த்யாக வி*ஶி*ஷ்டமாயிருக்குமென்று **ஆழ்வான்** பணிப்பர். அவ்வுபாயங்களுடைய த்யாஜ்யத்வத்தையும் இவ்வுபாயத்தினுடைய ஸ்வீகார்யத்வத்தையும் **ப்ரத$_2$மாசார்யர்** அருளிச் செய்தார். ''நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் இனி உன்னை விட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன்" என்றும் "நாகணை மிசைநம்பிரான் சரணே சரண் நமக்'' கென்றும், ''சிற்றவேண்டா சிந்திப்பே அமையும்'' என்றும். இவ்வர்த்தத்தை **ஸ்ரீதொண்டரடிப்பொடி ஆழ்வாரும்** அநுஸந்தி$_4$த்தருளினார், ''குளித்து மூன்றனலையோம்பும் குறிகொளந்தணமை தன்னை ஒளித்திட்டேன் என்கணில்லை நின்கணும் பத்தனல்லேன் அளித்தெனக்கு அருள் செய்கண்டாயென்று". இவ்வர்த்தத்தை **நாய்ச்சியாரும்** அநுஸந்தித்து அருளினார், ''நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்; சிற்றாதே பேசாதே; போற்றியாம் வந்தோம் புகழ்ந்து'' என்று. அவ்வுபாயங்கள் அஸக்ருத்கரணீயங்கள். இவ்வுபாயம் ஸத்ருத்கரணீயமென்று **எம்பார்** அருளிச் செய்வர். இதில் வர்த்தமாநம் தத்காலாநுஷ்ட$_2$ான

ப்ரகாஶகமென்று **பிள்ளை** அருளிச் செய்வர். அவை அதி$_4$க்ருதாதி$_4$காரம். இது ஸர்வாதி$_4$காரம்; உத்தம புருஷனாலே ஆக்ஷிப்தனான கர்த்தா இன்னானென்று தோற்றாமையாலே யென்று **பெரியபிள்ளை** அருளிச் செய்வர். ப்ராப்தாவும் உபாயமல்ல ப்ரபத்தியும் உபாயமல்ல ப்ரபத்தவ்யனே உபாயமென்று **இளையாழ்வாரான திருமாலையாண்டான்** அருளிச் செய்வர். வ்யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷம் ப்ரபத்தியென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர். பேற்றுக்கு ப்ரபத்தி ஒருக்கால் பண்ண வமையும், புந: ப்ரபத்தி பண்ணுகிறது காலக்ஷேப ஸுக$_2$ரூபமென்று **ப$_4$ாஷ்யகாரர்** அருளிச் செய்வர். உபாயங்கள் அநர்த்த ப$_4$யத்தாலே த்யாஜ்யங்களென்று **திருக்கோட்டியூர் நம்பி** அருளிச் செய்வர். ஆர்த்தனுக்கு ஆஶுவாக ப$_2$லிக்கும். த்$_3$ருப்தனுக்கு தேஹ அவஸாநத்திலே ப$_2$லிக்குமென்று **பெரியநம்பி** அருளிச் செய்வர். கரணத்ரயமும் கூடுகை ஆர்த்த லக்ஷணம். இதில் ஒன்றுகூடுகை த்$_3$ருப்த லக்ஷணம். தத்தத் ப்ராயஶ்சித்தங்களாலே நிவர்த்தநீயமான ஸகல பாப நிவ்ருத்திக்கு ததே$_3$கோபாய வ்யவஸாயம் ப்ரபத்தியென்று **பெரியமுதலியார்** அருளிச் செய்வர். ப$_4$க்தி ப்ரபத்திகளிரண்டும் ப$_4$க$_3$வத் ப்ரஸாத$_3$ங்களாயிருந்ததே யாகிலும் அதிஶயேந ப்ரஸாத$_3$ மூலம் ப்ரபதநம் என்று **மணக்கால் நம்பி** அருளிச் செய்வர். ப$_4$க்தி நிஷ்ட$_2$னுக்கு கர்ம அவஸாநத்திலே ப்ராப்யமென்று **உய்யக்கொண்டார்** அருளிச் செய்வர். பூர்வ வாக்யம் ஸர்வ ப$_2$ல ஸாத$_4$ாரணம். உத்தர வாக்யம் ப$_4$கவதே$_3$க ப்ரயோஜநமாயே இருக்குமென்று **நாத$_2$முநிகள்** அருளிச் செய்வர். **பிள்ளை திருநறையூரரையர்** பூர்வ வாக்ய நிஷ்ட$_2$ர். **ஆட்கொண்டவில்லி ஜீயர்** உத்தர வாக்ய நிஷ்ட$_2$ர். விக்ரஹத்துக்கு ஶுப$_2$ாஶ்ரயத்வம். ஆஶ்ரித கார்யாபாத$_3$கத்வம் ஜ்ஞாந ஶக்திகளுக்கு, ஆஶ்ரயண ஸௌகர்யாபாத$_3$கத்வம் வாத்ஸல்யாதிக்கு. புருஷகாரத்வம் வடித்தடங்கண் மலராளான பிராட்டிக்கு, உபாயத்வமுள்ளது ஈஶ்வரனுக்கென்று **பட்டர்** அருளிச் செய்வர். இவ்வுபாய விஶிஷ்டனுக்கு அபராத$_4$பூ$_4$யஸ்த்வம் உபாய ப$_2$ல்குத்வம் ப$_2$லகு$_3$ருத்வமென்கிற ஶங்கா த்ரயமும் கழிய வேணுமென்று **நஞ்ஜீயர்**

அருளிச் செய்வர். அல்லாத உபாயங்கள் பதர்க்கூடு. இது ஸர்வ *ஶ*க்தியை அண்டைகொண்டாற் போலே என்று **நம்பிள்ளை** அருளிச் செய்வர். சரணத்$_3$வித்வத்தாலே அநபாயிநீயான பிராட்டியையும் ஸஹியாதபடியாயிறே உபாயத்தினுடைய சுணையுடைமை யிருக்கும்படி என்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். **எம்பெருமானாலே எம்பெருமானைப் பெறுமித்தனை அல்லது ஸ்வயத்நம் கொண்டு பெற நினையார்கள் ஸ்வரூபஜ்ஞர்.** அதென் போலென்னில் சாதகமானது வர்ஷத$_4$ாரையைப் பெறில் பாநம் பண்ணியும் பூ$_4$கத ஜலஸ்பர்*ஶ*ம் பண்ணாதாற் போலேயும். "ப்ரபந்ந*ஶ்*சாதகோயத்$_3$வத் ப்ரபத்தவ்ய: கபோதவத்" என்று ப்ரமாணம். தான் தனக்குப் பார்க்கும் நன்மை காலன் கொண்டு மோதிரமிடுமாப் போலே; எம்பெருமானாலே வரும் நன்மை மாதா பிதாக்கள் பொன் பூட்டுமாப் போலே. தான் தனக்குப் பார்க்கும் நன்மை ஸ்தநந்தய ப்ரஜையைத் தாய் மடியினின்றும் பறித்து க$_4$ாதுகனான ஆட்டு வாணியன் கையிலே கொடுக்குமாப்போலே யென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். பிறரால் வரும் உன்னையும் வேண்டேன்; என்னால் வரும் உன்னையும் வேண்டேன்; உன்னால் வரும் உன்னை வேண்டுவேன் என்றிருக்க, வேண்டேனென்றிருக்கிறது அத்யந்த பாரதந்த்ர்யத்தால் ஸ்வாமி ஏதாவது செய்து கொள்ளட்டும் என்னும் நிலை. "தி$_3$வி வா பு$_4$வி வா" என்று ப்ரமாணம். "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டடனென்று" **ப்ரத$_2$மாசார்யரும்** அநுஸந்தித்து அருளினார். "களைவாய் துன்பம் களையாதொழிவாய்களை கண் மற்றிலே"னென்று **எம்பார்** அநுஸந்தாநம். புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கென்று ஸம்ஸார ஸாகரத்துக்கு உத்தாரகனவனே, "துன்பக் கடல் புக்கு வைகுந்தனென்பதோர் தோணி பெறாதுழல்கின்றே"னென்று **நாய்ச்சியாரும்** இவ்வர்த்தத்தை யநுஸந்தி$_4$த்தருளினார். இவ்வுபாயத்தினுடைய ஸ்வரூபம் இதரோபாய அஸஹத்வம். எங்ஙனே யென்னில் இதரோபாய ஸ்பர்*ஶ*த்தில் அபாய ஸம்ஸர்க்க$_3$த்தோபாதி ப்ராய*ஶ்*சித்தம் பண்ணவேணும், இவ்வதி$_4$காரி

ப்ராயஶ்சித்தம் பண்ணுமளவில் புந: ப்ரபத்தியேயாகக்கடவது. ஆனால் அஸக்ருத்கரணத்துக்கு தோ$_3$ஷம் வாராதோவென்னில், பெருக்காற்றிலே ப்ரப$_3$லன் கையைப் பிடித்து நீந்தினால் சுழல்கள் இறுகப் பிடிக்குமோபாதி அர்த்த$_2$ பராமர்ஶவ்யவஸாயமேயுள்ளது. ஆகையாலே தோ$_3$ஷம் வாராதென்று **நஞ்ஜீயர்** அருளிச் செய்வர். அதிகாரி ஸர்வோபாய த$_3$ரித்$_3$ரனாயிருக்கும்? ஸமாப்$_4$யதி$_4$க த$_3$ரித்$_3$ரனாயிருக்குமென்று **நடுவில் திருவீதிப்பிள்ளை** யருளிச் செய்வர். ப$_4$க்தி ப்ரபத்திகள் இரண்டும் துல்ய விகல்பங்களென்று **ஆழ்வான்** பணிக்கும், ப$_4$க்திக்கு ஆயாஸ கௌரவமுண்டாகிறவோபாதி ப்ரபத்திக்கும் விஶ்வாஸ கௌரவமுண்டு. பித்தோபஹதனுக்கு ரஸ்ய பதார்த்த$_2$ம் திக்தமாமோபாதி பா$_4$க்$_3$ய ஹீநர்க்கு ப்ரபத்தியில் விஶ்வாஸ கௌரவம் பிறவாதென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர். ப$_4$க்தி ப்ரபத்திகளிரண்டுக்கும் ஈஶ்வரோபாயத்வம் ஒத்திருந்ததேயாகிலும் பக்தியில் ப$_2$லப்ரதா$_3$நத்தாலே வருகிற உபாயத்வமே யுள்ளது. ப்ரபத்தியில் கரண ரூபத்தாலே வருகிற ஸாத$_4$நத்வத்தாலே ஸாக்ஷாத் ப$_4$கவது$_3$பாயத்வம் ப்ரகாஶிக்கையாலும் ப்ராரப்$_3$த$_4$ ப$_4$ங்க$_3$ ரூபமான ப$_2$லாதி$_4$க்யத்தாலும் ப$_4$க்தியில் காட்டில் ப்ரபத்தி விஶிஷ்டையாகக் கடவதென்று நஞ்ஜீயரருளிச் செய்வர். ஸ்வவிஷய ஶாந்த்யர்த்தமான ப்ரபத$_3$நமும் ஸ்வரூபஹாநி, இதர விஷய ஶாந்த்யர்த்தமான ஸாங்க ப்ரபத$_3$நமும் ஸ்வரூப ஹாநி யென்று பிள்ளையருளிச் செய்வர். ஸ்வீக்ருதோபாய பூ$_4$தனாகை யாவது ஸ்வீகார விஷய பூ$_4$தனாகை, அதாவது ஸ்வக$_3$த ஸ்வீகாரத்தில் உபாய பு$_3$த்தி$_4$யை விட்டு பரக$_3$த ஸ்வீகாரத்துக்கு விஷய பூ$_4$தனாகையென்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். **உய்யக்கொண்டாருக்கு உடையவர்** ப்ரபத்த்யர்த்த$_2$த்தை அருளிச் செய்ய, அர்த்தம் அழகியது, வசந பா$_3$ஹுள்யத்தாலே ப$_4$க்தியை விட்டு இத்தைப் பற்ற வேண்டும். விஶ்வாஸம் பிறக்கிறதில்லையென்ன, "பு$_3$த்$_3$தி$_4$மானாகையாலே அர்த்த பரிஜ்ஞானம் பிறந்தது, ப$_4$க$_3$வத் ப்ரஸாத$_3$மில்லாமையாலே ருசி விளைந்ததில்லை" யென்று அருளிச் செய்தார். பதிவ்ரதையானவள் ராத்ரி தன் ப$_4$ர்த்தாவோடே ஸம்ஶ்லேஷித்து விடிந்தவாறே கூஸிதர

வேணுமென்று வழக்குப் பேசுமாப்போலே ப$_4$க்தியை உபாயமாக்கிக் கொள்ளுகை யென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். ஸமாவர்த்தனம் பண்ணின பிள்ளை பிதாவான ஆசார்யனுக்கு தக்ஷிணை கொடுக்கப் புக்கால் அவன் கொடுத்தவற்றையெல்லாம் கொடுக்குமாப்போலே, கொடுத்தாலோவென்னில் அதெல்லாம் கொடுத்து முடியாமையாலே அவனே உபாயமாக வேணும். ப்$_3$ராஹ்மணனானவன் வைதிகனாகையாலே அஹிம்ஸா ப்ரத$_2$மோ த$_4$ர்ம: என்றிருக்க, ஶாஸ்த்ர விஶ்வாஸத்தாலே யஜ்ஞத்தில் பசுவை ஹிம்ஸியா நின்றானிறே. அவ்வோபாதி இவ்வுபாயத்துக்கும் விஶ்வாஸம் ப்ரத$_4$ாநமாக வேணுமென்று **நம்பிள்ளை** யருளிச் செய்வர். **நம்முடைய பூர்வாசார்யர்கள் பூர்வ வாக்யத்தை ஒருக்கால் உபதே$_3$ஶித்து உத்தர வாக்யத்தை ஒருக்கால் உபதே$_3$ஶித்துப் போருவர்கள்.** அவ்வதிகாரி பாகத்துக்கீடாக அவ்வதி$_4$காரிகளிலே ப$_2$லாந்தரங்களைக் கொள்வாருமுண்டு. எங்ஙனே என்னில் த்$_3$ரௌபதி$_3$ ஶரணாகதிக்கு ப்ரயோஜனம் ஆபந்நிவாரணம், காக ஶரணாகதிக்கு ப்ரயோஜநம் ப்ராண லாப$_4$ம். விபீ$_4$ஷண ஶரணாகதி$_3$க்கு ப்ரயோஜநம் கார்ய ஸித்$_3$தி$_4$. இனி ஶரண்ய ஶரணாகதியும் ப$_2$லிப்பது எங்ஙனே என்னில் சக்ரவர்த்தி திருமகன் பக்கலிலே கண்டுகொள்வது. ப்ரபத்தியாகிற த$_4$நமிருக்க இப்படி *அறவைகளாய்த் திரிவதே என்று **ஆச்சான் பிள்ளை** அருளிச் செய்வர். ஸ்வீகாரத்தை உபாயமாக்கிக் கொள்ளுகிறது ப$_4$க்தியோபாதியென்று **ஜீயர்** அருளிச் செய்வர். அந்த ஸ்வீகாரம் சைதந்ய க்ருத்யம் சித்த ஸமாத$_4$ாநார்த்தமாகவென்று **ஆச்சான் பிள்ளை** யருளிச் செய்வர். பக்தி ஆனைத் தொழிலோபாதி, ப்ரபத்தி எலுமிச்சம் பழங்கொடுத்து ராஜ்யம் கொள்ளுமோபாதி யென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். இதரோபாயங்கள் ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வத்தைக் குமறிருக்கும்படி பண்ணும். இவ்வுபாயம் அவனுடைய ஜீவநத்தை அவனுக்காக்கிக் கொடுக்கும் என்று **நம்பிள்ளை** அருளிச் செய்வர். இதரோபாயங்கள்

* அறவைகளாய்த் திரிவது = உதவியற்ற நிலை

ஸ்வரூபஹாநி. இவ்வுபாயம் ஸ்வரூபாநுரூபமென்று **நஞ்ஜீயர்** அருளிச் செய்வர். பொற்குடத்திலே தீர்த்தத்தை நிறைக்க அதில் ஸுராபி3ந்து3 பதிதமானால் அதடைய அபஹதமாமோபாதி இந்த உபாயங்கள் ஸ்வாதந்த்ர்ய கர்ப்ப4ங்களாயிருக்கும். இந்த உபாயம் ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பூர்வகமான ப4க3வத் பாரதந்த்ர்ய யுக்த மாயிருக்குமென்று **எம்பார்** அருளிச் செய்வர். அவை சிரகால ஸாத்4யங்களுமாய் அபராத4 ப3ஹுளங்களுமாயிருக்குமாகையாலே து3ஷ்கரங்களுமாயிருக்கும். இது ஸக்ருத் க்ருதமாய் நிரபாயமாகையாலே ஸுகரமுமாயிருக்குமென்று **இளையாழ்வாரான திருமாலையாண்டானருளிச்** செய்வர். இவ்வுபாய வி*ஶே*ஷமும் மஹா வி*ஶ்*வாஸ பூர்வகமான ததே3கோபாயத்வ ப்ரார்த்த2நா வி*ஶி*ஷ்டமாயிருக்கும். ராத்ரி கருவுகலத்திலே ராஜ மஹேந்த்ரன் படியை அபஹரித்து விடிந்தவாறே அத்தைத் திருவோலக்கத்திலே உபகரிக்குமாப் போலே இவனுடைய ஸமர்ப்பணமென்று **நஞ்ஜீயர்** அருளிச் செய்வர். தாய்முலைப் பாலுக்குக் கூலி கொடுக்குமாப் போலே ஆகையாலே கொடுக்கைக்கு ப்ராப்தியில்லை. கொடுக்கைக்கு ப்ராப்தியில்லாதாற்போலே பறிக்கவும் ப்ராப்தியில்லை. பறிக்கையாவது ப்4ரமிக்கை. கொடுக்கையாவது ப்4ரமந்தீருகை யென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். பாதி3ரிக்குடியிலே **ப4ட்டர்** எழுந்தருளின அளவிலே வேடனுடைய க்ருத்யங்களைக் கேட்டு **ஒரு கா4துகன் திர்யக்யோநி ப்ரபத3நம் பண்ண விரங்கினபடி கண்டால் ஸர்வகாரண பூ4தனான பரம காருணிகன் ஒரு சேதநன் ப்ரபத3நம் பண்ணினாலிரங்குமென்னு மிடத்தில் ஆ*ஶ்*சர்யமில்லையிறே** என்று அநுஸந்தி4த்தருளினார்.

ஆக இவ்வுபாய வி*ஶே*ஷம் ஸாத4நாந்தர வ்யாவ்ருத்தமாய் இருக்கும்; தே3வதாந்தர வ்யாவ்ருத்தமாயிருக்கும்; ப்ரபந்ந வ்யாவ்ருத்தமாயிருக்கும்; ப்ரபத்தி வ்யாவ்ருத்தமாயிருக்கும்.

உபாய வைப4வம் என்னும் மூன்றாம் ப்ரகரணம் ஸம்பூர்ணம்

## நான்காம் ப்ரகரணம் – உபேயயாத2ாத்ம்யம்

அநந்தரம் உபேயயாத2ாத்ம்யம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. எங்ஙனே யென்னில் உபேயங்கள் அநேகங்களாயிருக்கும். ஐஶ்வர்யமென்றும் கைவல்யமென்றும் ப4க3வத் ப்ராப்தி யென்றும். இதில் ஐஶ்வர்யம் பலவகையாயிருக்கும். கைவல்யமாவது கன்று நாக்கு வற்றிச் சாவாநிற்க, தாய் தன் முலையைத் தானே உண்ணுமாப் போலே யென்று **ப4ட்டர்** அருளிச் செய்வர். ஸர்வாலங்க்ருதையான ஸ்த்ரீக்கு ப4ர்த்ரு விரஹம் போலே யென்று **நம்பிள்ளை** யருளிச் செய்வர். இனி ப4க3வத் ப்ராப்தியாவது ஐஶ்வர்ய கைவல்யங்களைக் காற்கடைக் கொண்டு அர்ச்சிராதி3 மார்க்க3த்தாலே அந்தமில் பேரின்பமான பரம பத3த்தை அடைந்து ஆவிர்பூ4த ஸ்வரூபராய் ஸாலோக்ய ஸாரூப்ய ஸாமீப்ய ஸாயுஜ்யாதி3களைப் பெற்று அநுப4விக்கை. ஐஶ்வர்யத்திலாசை நீர்க்குமிழியை பூர்ணமாகக்கட்ட நினைக்குமாப் போலே. கைவல்யம் மஹாபே4ாக3த்துக்கு இட்டுப் பிறந்திருக்க ஸ்வயம் பாகம் பண்ணுமோபாதி. இனி ப4க3வத் ப்ராப்தியாவது ஈஶ்வரனுடைய ஸ்வரூபரூபகு3ண விபூதிகளை ஸாக்ஷாத்கரித்தநுப4வித்து அவ்வநுப4வாதி3ஶயத்துக்குப் போக்குவீடாகப் "பணி மானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" வென்று ஸர்வவித கைங்கர்யங்களையும் பண்ணி அந்த கைங்கர்ய விஶேஷத்தாலே ஈஶ்வரனுக்குப் பிறந்த முகே2ால்லாஸத்தைக் கண்டு ஆநந்தியாயிருக்கை. சிலர் கு3ணாநுப4வம் பண்ணுவர்கள். கரைகட்டாக் காவேரி போலே ப4க3வத்3 கு3ணங்களென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். சிலர் விக்3ரஹாநுப4வம் பண்ணுவர்கள். பக்3த4ர்க்கு அந்நபாநாதி3களே த4ாரகம், ஸ்ரக் சந்த3னாதிகள் போஷகம், ஶப்3த3ாதி3கள் பே4ாக்3யம். முமுக்ஷுக்களுக்கு ஶேஷத்வம் த4ாரகம். ஆசார்ய ஸேவை போஷகம், கைங்கர்யம் பே4ாக்3யம். நித்யமுக்தர்களுக்கு தி3வ்ய மங்க3ள விக்3ரஹம் த4ாரகம், கைங்கர்யம் போஷகம், ப4க3வத்ப்ரீதி பே4ாக்யமென்று **ஆச்சான் பிள்ளை** யருளிச் செய்வர். இரண்டு பங்குக் கொருகையோலையோபாதி உபாயோபேயம் இரண்டும்

ஈஶ்வரனே யென்று **நஞ்ஜீயர்** அருளிச் செய்வர். உபாய ப்ரார்த்த₂னையும் உபேய ப்ரார்த்த₂னையும் அதி₄காரி க்ருத்யமென்று **எம்பார்** அருளிச் செய்வர். "அப்பொழுதைக்கப் பொழுதென்னாராவமுதம்" என்கிறபடியே ப்ரதிக்ஷணம் அபூர்வரஸத்தை யுண்டாக்குகையாலே நித்ய ப்ரார்த்த₂நீயமாயிருக்குமுபேயமென்று **ப₄ட்டர்** அருளிச் செய்வர். புருஷகார விஶிஷ்டமுபாயம் லக்ஷ்மீ விஶிஷ்டமுபேயமென்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். வ்யவஸாயமுபாயம் கைங்கர்ய முபேயமென்று பிள்ளையருளிச் செய்வர். புத்ரனுக்கு மாத்ரு பித்ரு ஶுஶ்ரூஷை இரண்டும் ப்ராப்தமாயிருக்குமோபாதி சேதநனுக்கு மிது₂ந ஶேஷ வ்ருத்தியே உபபேயமாகக் கடவதென்று **பெரியபிள்ளை** அருளிச் செய்வர். இவனுக்கு ப்ராப்யமானதொரு மிது₂நம் மரமும் கொடியும் சேர்ந்தாப் போலேயென்று **நம்பிள்ளை** அருளிச் செய்வர். ஶேஷித்வமாவது உபேயத்வம். எங்ஙனேயென்னில் ஶேஷபூ₄தனாலே பண்ணப்பட்ட கிஞ்சித்காரமாகிற அதிஶயத்துக்கு ஆஶ்ரயமாய் அதிஶயிதமாக்குகையென்று **நஞ்ஜீயர்** அருளிச் செய்வர். ராஜ்ய ப்₄ரஷ்டனான ராஜாவுக்கு மீண்டும் ராஜ்ய ப்ராப்தியுண்டானவோபாதி ஶேஷபூ₄தனான இச்சேதநனுக்கு ஶேஷித்வாநுப₄வமென்று **இளையாழ்வாரான திருமாலையாண்டான்** அருளிச் செய்வர். மிது₂ந ஶேஷபூ₄தனுக்கு ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யம் மிது₂நமே யாயிருக்கும். இதிலொன்றைப் பிரிக்கில் ப்ரப₄ா ப்ரப₄ாவான்களைப் பிரிக்க நினைக்குமோபாதியென்று **நம்பிள்ளை** அருளிச் செய்வர். இதிலொன்றை விட்டு ஒன்றைப் பற்ற நினைத்தானாகில் மாத்ருஹீநனான புத்ரனோபாதி அறவையாயும் பித்ரு ஹீநனான புத்ரனோபாதி அநாத₂னாயுமிருக்கும். இருவரும் கூடின போதிறே ஸ்ரீமத் புத்ரனாவதென்று **பெரியாண்டான்** அருளிச் செய்வர். பிராட்டியையொழிய ப்ரஹ்மசாரியெம்பெருமானைப் பற்ற நினைத்தானாகில் ஏகாயநமாகிற படுகுழியிலே விழும். எம்பெருமானையொழிய பிராட்டியைப் பற்ற நினைத்தானாகில் ஆநீசாக்ரமமாகிற படுகுழியிலே விழுமென்று **நஞ்ஜீயர்** அருளிச்

செய்வர். வ்யாக்$_4$ர ஸிம்ஹங்களோபாதி உபாய விஶேஷம். யூத$_2$பதியான மத்த கஜத்தோபாதி உபேய விஶேஷமென்று **திருக்கோட்டியூர்நம்பி** அருளிச் செய்வர். இச்சேதநனுக்குக் கைங்கர்யம் பண்ணாதபோது ஶேஷத்வ ஸித்$_3$தி$_4$யில்லை. ஈஶ்வரனுக்குக் கைங்கர்யம் கொள்ளாதபோது ஶேஷித்வ ஸித்தியில்லை. இருவர்க்கும் இரண்டும் இல்லாதபோது இருவருடைய பே$_4$ாக$_3$மும் குலையுமென்று **பிள்ளையுறங்காவில்லித$_3$ாஸர்** அருளிச் செய்வர். இதில் ஶேஷத்வத்தாலுண்டான பே$_4$ாக$_3$ம் ஶேஷியதாய் இவனிப்படிக் கொள்ளுகிறானென்கிற பரிவு ஶேஷபூதனுக்குள்ள பே$_4$ாக$_3$மென்று **மிளகாழ்வான்** வார்த்தை. “படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பே”னென்று ப்ரமாணம். ஸ்ரீஸ்தநம் போலே பே$_4$ாக்$_3$யன் சேதநன். பே$_4$ாக்தா பரம சேதநன். ஆனால் அசித்திற் காட்டில் வாசி ஏதென்னில் ஈஶ்வரன் பே$_4$ாக்தா, நாம் பே$_4$ாக்$_3$யமென்கிற ஜ்ஞாந விஶேஷமென்று **திருமாலையாண்டான்** அருளிச் செய்வர். இக்கைங்கர்யம் பே$_4$ாக$_3$ ப்ரீதியாலே உண்டாம். அந்த ப்ரீதி அநுப$_4$வத்தாலே வரும். அநுப$_4$வம் அநுப$_4$ாவ்யத்தை அபேக்ஷித்திருக்கும். அநுப$_4$ாவ்ய ஸ்வரூபமும் ரூபமும் கு$_3$ணமும் விபூ$_4$தியும் உபாத$_3$ாநமுமாய் இதில் ஸ்வரூபம் பரிச்சேதிக்க வரிது. குணங்கள் அளவிறந்திருக்கும். “சீலமெல்லையிலான்”, “பிணங்கி அமரர் பிதற்றும் குண”மென்று ப்ரமாணம். இனி பூர்ணாநுபவம் பண்ணலாவது விக்ரஹ மொழியவில்லை. அவ்விக்$_3$ரஹந்தான் அப்ராக்ருதமாய் ஸ்வயம் ப்ரகாஶமுமாய் ஆநந்தாம்ருத த$_4$ாரைகளைச் சுரக்கக் கடவதாய் பொற்குப்பியின் மாணிக்கம் போலே அகவாயிலுண்டான தி$_3$வ்யாத்ம ஸ்வரூபத்தைப் புறம் பொசிந்து காட்டக் கடவதாய் “முத்தின் திரள் கோவை” என்கிறபடியே அபரிமித கல்யாண கு$_3$ணங்களைக் கண்ணாடி போலே ப்ரகாஶிப்பிக்கக் கடவதாய் “வடிவிணையில்லா மலர் மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை” என்கிறபடியே பூவில் பரிமளமான பிராட்டியும் மண்ணிற் பரிமளமான பிராட்டியும் மடித்துப் பிடித்தாலும் மாந்தும்படியான மென்மையை யுடைத்தாய் நித்யாநுபா$_4$வ்யமாய் பூர்வ ப$_4$ாக$_3$

ஸித்$_3$த$_4$மான கர்ம ப$_4$ாக$_3$த்தாலும் ஆராதி$_4$க்கப்படுமதாயிருப்பதொன்று. அதுதான் அஞ்சுவகையாயிருக்கும். பரத்வமென்றும் வ்யூஹமென்றும் அவதாரமென்றும் அந்தர்யாமித்வமென்றும் அர்ச்சாவதாரமென்றும். அதில் பரத்வமாவது முக்த ப்ராப்யமாயிருக்கும். வ்யூஹம் ஆஶ்ரிதருடைய கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே பள்ளிகொள்ளக் கடவதாய் ஸநகாதி$_3$களுக்கு பே$_4$ாக்$_3$யமாயிருப்பதொன்று. அவதாரங்கள் ராமக்ருஷ்ணாதிகள். அந்தர்யாமித்வம் ஆத்மோஜ்ஜீவநார்த்த$_2$மாக ஸ்வரூபேண நியமித்துக் கொண்டு நிற்கும் நிலை. அங்ஙனன்றியே உபாஸகர்க்கு ஶுப$_4$ாஶ்ரயமான விக்$_3$ரஹத்தோடே ஹ்ருத$_3$ய புண்ட$_3$ரீகத்திலே நிற்பதொரு ஆகாரமுண்டு. அர்ச்சாவதாரங்கள் கோயில் திருமலை துடக்கமான ப்ராப்ய ஸ்த$_2$லங்கள். நாடழியா நிற்க, மேல் நிலமாகிற நீணிலாமுற்றத்திலே இனிய சந்த$_3$ந குஸும தாம்பூ$_3$லாதிகளாலே அலங்கரித்து சத்ர சாமராதிகள் பணிமாற அத்$_3$தே$_3$ஶவாஸிகளுக்கு முக$_2$ங் கொடுத்து த்ரிபு$_4$வன சக்ரவர்த்தியென்று விருது$_3$ பிடிக்குமாப் போலவும், பயிருலரா நிற்கக் கடலிலே வர்ஷிக்கும் காளமேகம் போலவும் த்ருஷார்த்தன் நாக்கு வற்றிச் சாவா நிற்க மத்ஸ்யத்துக்குத் தண்ணீர் வார்க்கும் த$_4$ார்மிகனைப் போலவும் பரத்வத்திலிருப்பு. பரமோத$_3$ாரனாயிருப்பான் ஒரு த$_4$ார்மிகன் ஒரு க்$_3$ராமத்துக்குக் கொடுத்த த்$_3$ரவ்யத்தை நாலு க்$_3$ராமணிகள் வாங்கி விப$_4$ஜித்துக் கொள்ளுமோபாதி க்ஷீரவ்யூஹமான க்ஷீராப்$_3$தி$_4$. கு$_3$ணஹீந ப்ரஜைகளைத் தள்ளி கு$_3$ணவான்களைக் கைக்கொள்ளும் பிதாவோபாதியும் மண்டல வர்ஷம் போலவும் அவதாரங்கள். நாம் அழிக்க நினைத்தாலும் அழியாதபடி நம்மையும் தன்னையும் நோக்கிக் கொண்டு நாமாக நினைத்தவன்று அதுக்கான விடத்திலே முகங்காட்டியும் பித்தர் கழுத்திலே சுளுக்கியிட்டுக் கொண்டால் பின்னே நின்று அறுத்துவிடும் மாதாவைப் போலவும் மத$_3$ம் பட்ட ஆனை கொல்லப்புக்கால் அதின் கழுத்திலே இருந்த பாகன் அதின் செவியையிட்டதன்கண்ணை மறைக்குமா போலவும் இராமடமூட்டுவாரைப் போலவும் உணரில்

கையைக் கடிக்குமென்று உறக்கத்தில் பாலும் சோறும் பு$_4$ஜிப்பிக்கும் மாதாவைப் போலவும் அந்தர்யாமித்வம். ராஜ மஹிஷி தன் ப$_4$ர்த்தாவினுடைய பூம் படுக்கையிற் காட்டில் ப்ரஜையினுடைய தொட்டிற்காற்கடை போ$_4$க்யமாக வந்து கிடக்குமாப் போலவும் கோயில் திருமலை பெருமாள் கோயில் துடக்கமான அர்ச்சா ஸ்தலங்கள். முத்துத் துறையிலே குடில் கட்டிக் கிடக்கிற கர்ஷகனைப் போலவும் க்$_3$ராமாதி$_4$ தே$_3$வதையும் க்$_3$ருஹார்ச்சையுமென்று **திருக்குருகைப்பிரான் பிள்ளான்** பணிப்பர். ஆவரண ஜலம் போலே பரத்வம், க்ஷீராப்தி போலே வ்யூஹம், ஆற்றுப்பெருக்குப் போலே அவதாரங்கள், பூ$_4$க$_3$த ஜலம் போலே அந்தர்யாமித்வம், அவற்றில் தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம் என்று **ஆச்சான்பிள்ளை** அருளிச் செய்வர். சேதநனுடைய ஸ்வரூப ஸ்தி$_2$த்யாதிகள் ப$_4$க$_3$வத$_3$தீ$_4$நங் களாயிருக்குமாப் போலே அர்ச்சாவதாரத்தினுடைய ஸ்வரூபஸ்தி$_2$தி ப்ரவ்ருத்த்யாதி$_3$களும் ஆஶ்ரிதரிட்ட வழக்காயிருக்குமென்று **ஜீயர்** அருளிச் செய்வர். "ப$_4$க்த பராதீ$_4$நம்", "தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவந்தானே" யென்று ப்ரமாணம். தானுகந்த விக்$_3$ரஹத்தை ஆராதிக்கும் போது ராஜவதுபசாரமும் புத்ரவத் ஸ்நேஹமும் ஸர்ப்ப வத்$_3$பீ$_4$தியுமுண்டாக வேண்டுமென்று **எம்பார்** அருளிச் செய்வர். பரத்வாதி$_3$களைந்தையும் சேர **பரமாசார்யர்** அநுஸந்தித்து அருளினார். "தேனே பாலே கன்னலே அமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே"யென்று. **ப$_4$ட்டருடைய** சரம காலத்தில் பெருமாள் எழுந்தருளி வந்து நாம் உமக்குச் செய்ய வேண்டுவதென்னென்று கேட்டருள பரமபத$_3$த்திலிந்தச் சிவந்த முக$_2$ம் காணேனாகில் மீண்டுமிங்கே வரவேணுமென்று விண்ணப்பம் செய்தார். ஸுக்ஷேத்ரம் உழுவானொருவனுக்கு மேட்டு நிலத்தையும் காட்டுமோபாதி, கோயில் வாஸம்தனக்கு பரமபத$_3$ம் கழுத்துக் கட்டியாயிறே இருப்பதென்று **பட்டர்** அருளிச் செய்வர். "மஹதா புண்ய மூலேந" வென்று ப்ரமாணம். "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்னும் கோயில் விட்டு பரமபதத்துக்குப் போவென்றால் குறைப்பாடு படுமென்று **நம்பிள்ளை**யருளிச் செய்வர். "அமரர் சென்னிப்பூ"

யென்கையாலே க$_3$க$_3$நகுஸுமம் போலே பரத்வம், வ்யூஹம் "பாற்கடலிற் பையத்துயின்ற பரமனெ"ன்றும் "அநந்தன் தன் மேல் நண்ணி நன்குறைகின்றா"னென்றும் சொல்லுகிறபடியே அருள்விஞ்சியிருக்கும். "மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப் பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானா"னென்கிறபடியே அவதாரங்கள் பத்தின் கீழ் மாற்றாயிருக்கும். அந்தர்யாமித்வம் ஆத்ம யாதா$_2$த்ம்யத$_3$தீ$_4$நமாய் அங்க$_3$ணஸ்த$_2$ கூபஜலம் போலே கு$_3$ணவத்$_3$க்ராஹ்யமாயிருக்கும். இனி அர்ச்சாவதாரமே பின்புள்ளவர்களுக்குமாஶ்ரயிக்கலாவது, பின்னானார் வணங்கும் சோதியென்று. பரத்வத்திலீஶ்வரத்வமாகிற அழல் விஞ்சியிருக்கும். ஆகையாலே அர்ச்சாவதார ஸ்த$_2$லமே முக்$_2$யமாகக் கடவது. **பிள்ளை திருநறையூரரையர்** ப$_4$ட்டர் ஸ்ரீபாதத்திலே த$_3$ண்டனிட்டு தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அருளிச் செய்ய வேணுமென்ன, **பொய்யேயாகிலும் அவனுகந்தருளின தி$_3$வ்ய தேஶங்களிலே புக்குத் திரிவார்க்கு அந்திம தசையிலே கார்ய கரமாம்** என்று அருளிச் செய்தார். "ஏரார் முயல்விட்டுக் காக்கைப் பின் போவதே" ஸ்த$_2$ல ஸஞ்சாரியை விட்டு ஶாக$_2$ா ஸஞ்சாரியைப் பற்றுவதே யென்று **ஆச்சான் பிள்ளை**யருளிச் செய்வர். **அழகர்** திருவோலக்கத்திலே **பிள்ளையழகப் பெருமாள்** வந்து புகுந்து **பெரியாண்டானைப்** பார்த்து பரமபத$_3$மிருக்கும்படி யென்னென்று கேட்க, இப்படியே யிருக்குமென்ன, ஆனால் இத்தை விட்டங்கே போவான் என்னென்ன, இங்கிருந்தால் முதுகு கடுக்கும், அங்குப் போனாலது செய்யாதென்றருளிச் செய்தார். இப்படிக்கொத்த ஸ்த$_2$லங்களிலே அடிமை செய்து போருகை இவனுக்கு ப$_4$கவத் ப்ராப்தியாவது. விரோதி$_4$ கழிந்தால் கைங்கர்யம் ஸ்வரூப ப்ராப்தமென்று **ஸோமாஶியாண்டான்** அருளிச் செய்வர். ஸம்ப$_3$ந்தம் ஸம்பாத்யமன்று, தடை விடுகை ஸம்பாத்யமென்று **பிள்ளான்** பணிக்கும். "பரமனடி பாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்" உண்டார்க்கு உண்ண வேண்டாவென்று **நம்பிள்ளை**யருளிச் செய்வர். இக்கைங்கர்ய பே$_4$ாக$_3$ம் யாவத$_3$ாத்மப$_4$ாவியாகையாலே

ஐஶ்வர்யாநந்த$_3$த்தில் விலக்ஷணமாயிருக்கும். இத்தால் ஸர்வ காலத்திலுமுண்டென்னுமிடம் தோற்றுகிறது. இது ப்$_3$ரஹ்ம போ$_4$கமாகையாலே ஸங்குசிதமான கைவல்யாநுப$_4$வத்தில் விலக்ஷணமாயிருக்கும். இத்தால் ஸர்வ தே$_3$ஶத்திலுமுண்டென்னுமிடம் தோற்றுகிறது. இது, கொண்ட சீற்ற மித்யாதி$_3$யாலே ஈஶ்வராநந்த$_3$த்திலும் விலக்ஷணமாயிருக்கும். அந்தரங்க$_3$ ப$_3$ஹிரங்க$_3$ ப$_4$ாவத்தாலே ஸர்வாவஸ்தையிலுமுண்டாயிருக்கும். இது ஸர்வவித$_4$மாகையாலே பிராட்டியினுடைய ஆநந்தத்திலும் விலக்ஷணமாயிருக்கும். கைங்கர்யமாவது "தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயுடை யம்மான்" என்கிறபடியே திருத்துழாயோபாதி இஷ்ட விநியோக$_3$ார்ஹமாயிருக்கை. "ஆளும் பணியுமடியேனைக் கொண்டான்", "பின்னுமாளும் செய்வனெ"ன்று ப்ரமாணம். **தானுகந்ததும் கைங்கர்யமல்ல, தானும் அவனுமுகந்ததும் கைங்கர்யமல்ல, அவனுகந்ததே கைங்கர்யமென்று நஞ்ஜீயர் அருளிச் செய்வர்.** "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே", "உனக்கே நாமாட் செய்வோ"மென்று ப்ரமாணம். கைங்கர்யம் ததீ$_3$ய கைங்கர்ய பர்யந்தமாக வேணும். ப$_4$க$_3$வத்$_3$ குணாநுப$_4$வத்துக்குப் படிமா **பெரியாண்டானும் எம்பாரும்,** ப$_4$க$_3$வத் கைங்கர்யத்துக்குப் படிமா **எண்ணாயிரத்தெச்சானும் தொண்டனூர் நம்பியும்.** ஆசார்ய கைங்கர்யத்துக்குப் படிமா **வடுகநம்பியும் மணக்கால் நம்பியும்.** ஸ்ரீராமாயணத்தாலும் மஹாப$_4$ாரதத்தாலும் ஸ்ரீவிஷ்ணு புராணத்தாலும் மூன்றதி$_4$காரிகளுடைய ஏற்றம் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில் ஸ்ரீராமாயணத்தாலே ஶப$_3$ரியினுடைய ஏற்றம் சொல்லுகையாலே உபேய ஏற்றம் வெளியிடுகிறது. மஹா ப$_4$ாரதத்தாலே த்$_3$ரௌபதியினுடைய ஏற்றம் சொல்லுகையாலே உபாய வைப$_4$வம் வெளியிடுகிறது. ஸ்ரீவிஷ்ணு புராணத்திலே சிந்தயந்தியினுடைய ஏற்றம் சொல்லுகையாலே உபாய விஶ்லேஷத்தில் த$_4$ரியாமையை வெளியிடுகிறதென்று **நம்பிள்ளை**யருளிச் செய்வர். ஆசார்ய விஶ்வாஸத்துக்குப் படிமா

**பொன்னாச்சியார்.** எங்ஙனேயென்னில் **பிள்ளையுறங்காவில்லி தாஸர் உடையவருடைய** வைப$_4$வம் பரப்பிக்க, அவரை இருகரையரென்றாள். அதுக்கடி என்னென்னில் **ப$_4$ாஷ்யகாரரை** ஒழியவும் பெருமாளைச் சரணம் புக்குப் போருவரென்றாளிறே. உபாய வ்யவஸாயத்துக்குப் படிமா **கூரத்தாழ்வானாண்டாள்.** எங்ஙனே யென்னில், **ப$_4$ட்டர்** ஓர் ஆர்த்தி விஶேஷத்திலே பெருமாளே ஶரணமென்னவேண்டி யிராநின்றதென்ன இக்குடிக்கு இதுதான் என்றாள். **ஆக வைஷ்ணவத்வஜ்ஞாநம் பிறக்கையாவது ஜ்ஞாநாநந்த$_3$ங்களும் புறவிதழென்னும்படி ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வமே ஸ்வரூபமாய்ப் போந்த இவனுக்கு அந்த ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வம் புறவிதழ் என்னும்படி ப$_4$ாக$_3$வத ஶேஷத்வமே ஸ்வரூபமென்றிருக்கை.** இது பிறவாதிருக்கையாவது ஒரு ப$_4$ாக$_3$வத விஶ்லேஷத்தில் நெஞ்சு நையாதிருக்கிறதுக்கு மேல் வருந்தி, ஒரு ப$_4$ாக$_3$வதனோடே ஸம்ஶ்லேஷிக்க இழிந்து அவனுடைய தே$_3$ாஷ தர்ஶனம் பண்ணுகை, உபாயத்துக்கு முற்பாடனாகையாலும் உபேயத்துக்கெல்லை நிலமாகையாலும் இருந்த நாளைக்கு உசாத்துணையாகையாலும் "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனென்று" **பட்டருக்கு எம்பாரருளிச்** செய்வர். ஆகையாலே "அன்பர் கூடிலும் நீங்கிலும் யாமெலிதும்" என்று **ப்ரத$_2$மாசார்யர்** அநுஸந்தி$_4$த்தருளிற்றும். ஒரு ப$_4$ாக$_3$வதனுடைய நியமநத்தை வெறுத்தல் பொறுத்தல் செய்கை யன்றிக்கே விஷய ப்ரவணனுக்குப் படுக்கைத் தலையில் விஷய பாருஷ்யம் பே$_4$ாக்யமாப்போலே யாகிலும் பே$_4$ாக்$_4$யமென்றிருக்கை என்று **திருக்கோட்டியூர்நம்பி** அருளிச் செய்வர். ஆர்த்த ப்ரபத்தி பண்ணி இக்கரைப் படுகையிலே ஒருப்பட்டிருக்கச் செய்தேயும் மாதா பிதாக்களும் கூட அநாதரிக்கும்படியான ஆர்த்தியையுடைய ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டால் அவனுடைய ரக்ஷணத்துக் குறுப்பாக இங்கே இருக்கையிலே ஒருப்படுகையென்று **திருக்கோட்டியூர்நம்பி** அருளிச் செய்வர். வைஷ்ணவனுக்கு ஜ்ஞாநாநுஷ்டானங்களிரண்டும் வேணும். அநுஷ்ட$_2$ாந ஹீநமான ஜ்ஞாநம் சரண ஹீநனான

சக்ஷுஷ்மானோபாதி, ஜ்ஞாந ஹீநமான அநுஷ்ட2ானம் அங்க்4ரி ஸஹிதனான அந்த4னோபாதியென்று **நம்பிள்ளை** யருளிச் செய்வர். அநுஷ்ட2ான மில்லாத ஜ்ஞாநமும், கிஞ்சித்காரமில்லாத ஸ்வரூபமும் குமரிருக்குமென்று **ஆச்சான் பிள்ளை** யருளிச் செய்வர். இனி ஆசார்ய வைப4வ ஜ்ஞாநம் பிறக்கையாவது அந்த4னானவனுக்கு த்3ருஷ்டியைத் தந்தவன், இருட்டறையில் கிடக்கிறவென்னை வெளிநாடு காணும்படி பண்ணின மஹோபகாரகன். செறிந்த இருளாலே வழி திகைத்த எனக்குக் கைவிளக்குக் காட்டுமோபாதி அஜ்ஞாந திமிரோபஹதனான எனக்கு மந்த்ர தீ3பத்தைக் காட்டி நல்ல த3ஶையிலே ஸ்நேஹ பூர்வகமாக அதுக்குப் பாத்ரமாக்கி ஶேஷத்வ ஜ்ஞாநம் பிறவாமையாலே உருமாய்ந்து கிடக்கிற எனக்கு ரக்ஷகத்வ ஶேஷித்வங்கள் எம்பெருமானுக்கு ஸ்வரூபமென்னு மிடத்தையும் ரக்ஷ்யத்வஶேஷத்வங்களெனக்கு ஸ்வரூபமென்னு மிடத்தையும் தோற்றக்கடவ ஶரீராத்மபா4வத்தையும் வெளியிட்டு ஶரீரிக்கு ரக்ஷகத்வமாய் ஶரீரத்துக்கில்லாதவோபாதி ஸ்வரக்ஷண நிவ்ருத்தியையும் பண்ணி ஶரீர ஸம்ஸ்காரம் ஶரீரிக்காமோபாதி போ4க்3த்ருத்வம் தத3தீ4நமாம்படி பண்ணி இப்படி ஶேஷத்வத்தில் கர்த்ருத்வம், ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வம், கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வம் போ4க்த்ருத்வத்தில் கர்த்ருத்வம், இவற்றை நிவர்த்திப்பிக்கக் கடவனாய் எங்ஙனேயென்னில், ஶேஷத்வத்தில் கர்த்ருத்வமாவது; ராஜாஸக்தியையிட்டு ராஜ்யத்தைப் பிடிக்கும் மந்த்ரிகளைப் போலே ப4க3வதா3ஸத்தியையிட்டு ஸதாசார்யனை நெகிழுகை. அதாவது ஶப்3தா3தி விஷய ஸ்பர்ஶத்தில் அச்சம் பிறவாதிருக்கையும் ப4க3வத்3 பா4க3வத கைங்கர்யத்தில் அநாதரம் பிறக்கையும். தந்நிவ்ருத்தியாவது ப்ராமாதி3கமாகவும் விஷய ஸ்பர்ஶமின்றியிலே இருக்கையும், ப4க3வத்3 பா4க3வத3 கைங்கர்யத்தில் அத்யாத3ரம் நடக்கையும். ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது நாம் ஜ்ஞாதாவாகையாலே யன்றோ நம்மை அங்கீகரித்ததென்று ப3ஹுமாநம் பண்ணுகை. தந் நிவ்ருத்தியாவது தே3ஹாத்மாபி4மாநிகளிலும் கடையாய் அசித் ப்ராயனான என்னை இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலே ஆத்ம

ஜ்ஞாநத்தைத் தந்து அங்கீகரித்தானென்று க்ருதஜ்ஞனாயிருக்கை. "அந்நலனுடை ஒருவனை நணுகினம் நாமெ"ன்று ப்ரமாணம். கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது நிஷித்$_3$த$_4$ங்களை விட்டு விஹிதங்களைப் பற்றினவாறேயிறே நம்மை அவன் அங்கீகரித்தானென்னு தன்னைப் போரப் பொலிய நினைத்திருக்கை. தந்நிவ்ருத்தியாவது மரப்பாவையை யாட்டுவிக்குமாப் போலே நிஷித்$_3$த$_4$ங்களையும் தானே நிவ்ருத்திப்பித்து விஹிதங்களையும் பற்றுவித்தானென்றிருக்கை. போ$_4$க்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது நாம் அவனுக்கு அடிமை செய்கிறோம் என்றிருக்கை. தந் நிவ்ருத்தியாவது தன் கையாலே தன் மயிரை வகிர்ந்தால் அந்யோந்ய முபகார ஸ்ம்ருதி வேண்டாதவோபாதி *ஶ*ரீர பூ$_4$தனான ஆத்மா *ஶ*ரீரிக்கு அடிமை செய்கிறானென்றிருக்கை. இப்படி கர்த்ருத்வத்தை யதா$_2$வாக உபகரித்த ஆசார்யன் மஹோபகாரகனென்றிருக்கை. **ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்ய அங்கீகாரத்துக்கொழிய உபேய ஸித்$_3$தி$_4$யில்லையென்று முதலியாண்டான் நிர்வஹிப்பர். க்ருபா மாத்ர ப்ரஸந்நாசார்ய அங்கீகாரத்துக்கொழிய உபேய ஸித்$_3$தி$_4$யில்லை யென்று ஆழ்வான் பணிப்பர்.** தன்னாசார்யன் திறத்தில் செய்த அடிமையை மறந்து, செய்யப்பெறாத அடிமைக்கு இழவாளனாயிருக்கை. அதாவது ஆசார்யன் திருவுள்ளத்தைப் பின்சென்ற **அநந்தாழ்வானைப்** போலே ஆசார்யன் நியமித்தபடி செய்த **அம்மாளைப்** போலவும் ஆசார்யன் திருவுள்ளத்திலநாதரம் தமக்கு அநர்த்தமென்று தம்மைத் தாழவிட்டடிமை செய்த **எச்சானைப்** போலவும் இருக்கை. இனி உபாய வி*ஶே*ஷ ஜ்ஞாநம் பிறக்கையாவது ஸாத்$_4$யமான ஸகல உபாயங்களையும் ஸாங்க$_3$மாகவும் மறுவலிடாதபடி விட்டு ஸ்வேதர ஸமஸ்த நிரபேக்ஷமாக ஸித்$_3$தோ$_4$பாயம் ஸ்வீகார்ய மென்றிருக்கை. இவ்வுபாய நிஷ்டையாவது ப்ரபத்தி ப்ரகாரமும் ப்ரபத்தி ப்ரபா$_4$வமும் நெஞ்சில் படுகை. ப்ரபத்தி ப்ரகாரம் நெஞ்சிலே படுகையாவது ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஸ்வாதீ$_4$நம் என்றிராதேயொழிகை. ப்ரபத்தி ப்ரபா$_4$வம் நெஞ்சிலே படுகையாவது ப்ரபத்தி நிஷ்ட$_2$னுடைய ப்ரக்ருதியில் ப்ரக்ருதி

நிரூபணம் பண்ணாதொழிகை. அபி₄ரூபையான ஸ்த்ரீக்கு அழகு வர்த்தி₄க்க வர்த்தி₄க்க அபி₄ரூபனாய் ஐஶ்வர்யவானான புருஷன் ஆந்தரமாக ஆழங்காற் படுமோபாதி அஜ்ஞனான சேதநன் அழுக்கு அறுக்க அறுக்க ஈஶ்வரன் திருவுள்ளம் அத்யாஸந்நமாய்ப் போருமென்று **நம்பிள்ளை** யருளிச் செய்வர். **சிறியாச்சான் அமுதனாரைப்** பார்த்து உம்முடைய அநநுஷ்ட₂ானம் பேற்றுக்கு இலக்கானபோது காணுமென்னுடைய அநுஷ்ட₂ானம் பேற்றுக்கு ஸாத₄நமாவதென்றார். ஸ்வீகாரத்தில் அந்வயமில்லாத போது ஸ்வதஸ்ஸர்வஜ்ஞன் ஸ்வத: ப்ரஸாத₃த்தாலே சேரவிடான். ஶோக நிவ்ருத்தி பிறவாதபோது சுமை எடுத்துவிடுமென்று **திருக்கோட்டியூர்நம்பி** அருளிச் செய்வர். ஸித்₃தே₄ாபாயத்தில் நிலை தாமரையோடையில் அன்னம் இறங்குமோபாதி, ஸாத்₄யோபாயங்களில் நிலை அவ்வோடையிலே யானை இறங்குமோபாதியென்று **இளையாழ்வாரான திருமாலையாண்டான்** அருளிச் செய்வர். இவ்வுபாயம் "எய்ப்பினில் வைப்பெ"ன்று தப்தனுக்கு வைத்த தண்ணீர்ப் பந்தலோபாதி யென்று **பெரியபிள்ளை** யருளிச் செய்வர். இனி உபேய யாத₂ாத்ம்ய ஜ்ஞாநமாவது: பரப₄க்தி யுக்தனாய் ஶேஷபூதனான தான் த₄ர்மமாகவும் ஶேஷியான ஈஶ்வரன் த₄ர்மியாகவும் அறிந்து த₄ர்ம த₄ர்மிகளோபாதி தனக்கும் அவனுக்கும் அவிநாபூ₄தமாவதொருபடி. விஶிஷ்ட விஶேஷத்தில் அவனேயாய்த் தானில்லையாம்படி ஐக்யம் பிறந்து தன் சைதந்யத்துக்கு அநுகூலமாம்படி அவனுடைய ஸ்வரூபரூப கு₃ண விபூ₄திகளைப் பிரிகதிர்படாதபடி அநுப₄வித்து அவ்வநுப₄வாநந்தத்துக்குப் போக்குவீடாக அவனுக்கே அபி₄மதமான ஸர்வவித கைங்கர்யங்களையும் பண்ணி அவ்வளவில் நில்லாமல் ததீ₃ய கைங்கர்யமே ஸ்வரூபாநுரூபமான பரம ப்ராப்யமென்றிருக்கை. ஸ்வீகாரத்திலுபாயத்வ புத்₃தி₄யும், பேற்றில் ஸம்ஶயமும் ப்ரதிபந்த₄கமென்று **திருக்கோட்டியூர்நம்பி** அருளிச் செய்வர். வைஷ்ணவத்வம் நெஞ்சில் பட்டதில்லையாகில் ஸ்வரூப நாஶகரையும் ஸ்வரூபவர்த்த₄கரையும் அறிந்திலனாகக் கடவன். ஆசார்ய

வைப$_4$வம் நெஞ்சில் பட்டதில்லையாகில் ஜாத்யந்த$_4$னோபாதியாகக் கடவன். உபாய வைப$_4$வம் நெஞ்சில்பட்டதில்லையாகில் மரக்கலத்தைவிட்டு சுரைப்பதரைக் கைக் கொண்டானாகக் கடவன். உபேய யாத$_2$ாத்ம்யம் நெஞ்சில் பட்டதில்லையாகில் ராஜபுத்ரனாய்ப் பிறந்து உஞ்ச$_2$வ்ருத்தி பண்ணுமோபாதியாகக் கடவன்.

யாமுந: கவிவாதீ$_3$ந்த்ர:
ஸுந்தரஸ்ய புரோஹித: |
ப்ரமேயரத்நமகரோத்
ஸர்வேஷாம் ஜ்ஞாநஸம்பதே$_3$ ||

(கவிகளிலும் வாதிகளிலும் தலைவரும், திருமாலிருஞ்சோலை எம்பெருமானான அழகருக்கு புரோஹிதருமான யாமுநாசார்யார் அனைத்து சேதநர்களுக்கும் ஜ்ஞாநமாகிற செல்வம் உண்டாவதன் பொருட்டு 'ப்ரமேயரத்நம்' என்னும் நூலை அருளிச் செய்தார்.)

உபேயயாத$_2$ாத்ம்யம் என்னும் நான்காம் ப்ரகரணம் ஸம்பூர்ணம்

பெரியவாச்சான்பிள்ளை குமாரர் ஆச்சான் பிள்ளை
திருவடியான வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயரவர் திருவடி
யாமுநாசார்யரருளிச் செய்த ப்ரமேய ரத்நம் ஸம்பூர்ணம்.

